


ஆசிரியர் :
கா. சி. வேங்கடரமணி.

காரியாலயம் :
43, மஹாதானத்தெரு, மாயவரம்.

மாத வெளியீடு

வருஷ சந்தா: உள்நாடு ரூ. 3. வெளிநாடு ரூ. 5.

| மாலை 8 | AUGUST 1942, சித்திரபானுஹு ஆவணிமீ | முத்து 2 |
|---|---|---|

## பொருள் அடக்கம்



"பாரதமணி"யில் வெளியாகும் கட்டுரைகள், கதைகளில் குறிப்பிடும் பெயர்கள் எல்லாம கற்பனைப் பெயர்கள்; ஒருவரையும் குறிப்பிடுவனவல்ல.




அடிமை நாட்டில் உண்மையில் அரசியல் வாழ்வும் உண்டோ என்று சென்ற மாதம் பதினைந்தாம் தேதி போகிறபோக்கில் நான் கேட்ட கேள்விக்கு, சமீபத்தில் நீட்டப்பட்ட, அல்ல, பெருக்கப்பட்ட, மத்திய சர்க்கார் ஆகஸ்டு 9ஆம் தேதி காலையில் பதிலளித்து விட்டது. காங்கிரஸ் ஸ்தாபனத்தைச் சட்டவிரோதமென்று கூறிவிட்டது. மின்னலைப் பின் தொடரும் இடிபோல மகாத்மா காந்தியையும் பண்டிட் ஜவஹர்லால் நேருவையும், இதர முக்கியத் தலைவர்களையும் மத்திய சர்க்கார் 'டிபன்ஸ் ஆப் இந்தியா' ஆக்டின் கீழ்காவலில் வைத்துவிட்டது.

வானத்தில் மேகமே இல்லாத சமயத்தில் நாம் மின்னலையும் இடியையும் கண்டு கேட்டால் எவ்வளவு வியப்பு ஏற்படுமோ அவ்வளவு வியப்பு தேசமெங்கும் இப்பொழுது உண்டாயிருக்கிறது. அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியில் நிறைவேறிய தீர்மானத்தைப்படித்துப்பார்த்தாலும் மகாத்மா காந்தியின் தெளிவானதும் சாந்தப்பரவசமானதும், கடைசியானதுமான பேச்சிலிருந்தும், மத்திய சர்க்காரின் இந்தப் படபடப்பான நடவடிக்கைக்கு ஒரு காரணமுமில்லை. சுதேச சமஸ்தானங்களில்கூட சர்வாதிகாரம் கைப்பற்றின திவான்கள் கொஞ்சம் யோசித்து சமரஸமாக போவது வழக்கம். இந்த நெருக்கடியில் சுதேச சமஸ்தான நடவடிக்கைகளைக் கூட மத்திய சர்க்கார் தோற்கடித்து விட்டது. இந்த அவசரக் கோலத்திற்கு என்ன காரணம்? யார் காரணம்? இதனால் என்ன லாபம்? யாருக்கு?

இப்போதைய நெருக்கடியில் அரசியல் பிரசினையைத் தெளிவாய் ஆராய்ச்சி செய்து தெரிந்து கொண்டாலொழிய மேற்கொண்டு திட்டம் போட முடியாது.

* * *

காங்கிரஸ் வேண்டுகோளென்ன? முஸ்லீம் லீக் வேண்டுகோளென்ன? இதர மைனாரிட்டிகளின் வேண்டுகோள்களும் இவைகளுக்கு முரண்பாடாக இருக்கின்றனவா? இந்த நெருக்கடியில் இந்தியாவுக்குப் பிரிட்டன் சுயேச்சையளித்தால் தான் அதனால் பேரும், பலப் பெருக்கும் அடைந்த இந்தியா இந்த யுத்தத்தில் பரிபூரண மனதுடன் கலந்து நேசநாடுகளுக்கு உதவி அளிக்க முடியும். இதில் என்ன சந்தேகம்.

ஒரு நண்பரிடமிருந்து நாம் பயனடைய வேண்டுமென்றால், அவர் கைகளை கட்டிவிட்டு 'வீட்டில் வேலை செய்யுங்கள்' என்பது எவ்வளவு முட்டாள்தனம்! கையைக் கட்டாமல் விட்டு விட்டால் ஒருவேளை அவர் வேலை செய்யும் போதே நமது கன்னத்தில் பளீரென்று ஒரு அறை விட்டு விடுவாரென்று பயந்து கையைக் கட்டி விடுவதும் உண்டா?

தற்கால அரசியல் நெருக்கடியில் சில வட இந்திய சமஸ்தானங்களில் நான் கண்ட காட்சி என் கண் முன் இப்பொழுது நிற்கிறது. தோட்டங்களில் கொத்தவும், பூச்செடிகளுக்கு தண்ணீர் விடவும், ரோடுகள் ரிபேர் செய்யவும் இதர வேலைகள் செய்வதற்கும், கைதிகளைக் கொண்டு வேலை வாங்குவது வழக்கம்

அப்படி வேலை செய்யும்போது கூட கைகால்களில் போட்டிருக்கும் விலங்குகளை விலக்குவதில்லை. ஓடிப்போய் விடுவார்களோ என்ற பயம். இப்படிச் செய்வதால் வேலை எவ்வளவு நன்றாய் சீக்கிரத்தில் நடக்கு மென்று நீங்கள் அறியலாம்.

இந்த நெருக்கடியில் மத்திய சர்க்கார் போட்டிருக்கும் அரசியல்திட்டம் இதற்குச்சமானமாகத்தான் இருக்கிறதென்று சொல்லவேண்டும்.

மத்திய சர்க்கார் நிர்மாணமே யுத்த சமயத்துக்கு ஏற்பட்ட, ஜனங்களின் அபிப்ராயத்தை யொட்டின, மத்தியசர்க்கார் ஆகாது. தேக்க மரமும், பூவரசும், செம்மரமும் கையிலிருக்கும்போது தச்சுக்கூலி ஜாஸ்தியாகு மென்று ஒதிய மரத்தை விலைக்கு வாங்கி வீடுகட்ட முயலும் மதிபோல இருக்கிறது. ஒதி பெருத்தால் உத்திரத்திற்கு ஆகுமா? என்ற பழமொழி இப்போது பெருக்கப் பட்ட மத்திய சர்க்கார் அரசியலில் நன்றாய்ப் பொருந்தும்.

ஒத்துழையாமை இயக்கத்தை மகாத்மா திட்டம் போட்டுப் பிரசாரம் செய்தாரேயொழிய இன்னும் ஆரம்பிக்க வில்லை. வைஸ்ராயைத் தாமேபேட்டி கண்டு சமரஸ வழி இன்னும் முடியுமா என்று தெரிந்து கொள்ள அவா உள்ள வராய்க்கூறியிருக்கிறார். அப்படிக்கூறிய வாய் மூடவில்லை. அவர் காவலில் வைக்கப்பட்டுவிட்டார். வாயுவேகமாய் காங்கிரஸ் ஸ்தாபனத்தைத் தடை செய்து தலைவர்களைச் சிறை வைப்பதால் இந்த நெருக்கடியில் யாருக்கு லாபம்? மத்திய சர்க்காருக்கு ஏதாவது அநுகூல முண்டா?

குழப்பமும் கலகமும் சோதாக்களுக்குப் பிழைப்பும் தேசத்திற்கு ஏராள நஷ்டமும் அதிகரிக்கின்றன. புத்துயிர் அளிக்கும் கிளர்ச்சியைத் தடியால் அடித்துத் தடுக்க முடியுமா?—நெருப்பை நெய்யால் அணைப்பதுபோல.

ஒரு இயக்கத்தை அஹிம்ஸா முறையிலும் சமாதான முறையிலும் நடத்தக் கூடிய தலைவர்களை ஜெயிலில்போட்டால் அந்த இயக்கத்தைக் கரைபுரண்டு பாழாக்காமல் நடக்கும்படி செய்வது யாரால் முடியும்? இது அரசியலின் அடிப்படையான உண்மை யல்லவா?

மகாத்மாவிடம், லின்லித்கோ பிரபு பரம ப்ரீதியும் மதிப்பும் வைத்திருக்கிறாரென்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். அப்படியிருக்க இந்த அவசர நடவடிக்கைக்கு பிரிட்டிஷ் மந்திரி சபையும், இந்தியாக் காரியதரிசி அமெரியும், இப்பொழுது மத்திய சர்க்காரில்துள்ளிக் குதிக்கும் அங்கமும், முக்கியக் காரணம் என்று தோன்றுகிறது. நேசநாடுகளில் அரசியலிலும் யுத்ததந்திரத்திலும் தீர்க்கதரிசிகளே இதுவரை எனக்குக் கண்ணில் புலப்படவில்லை என்று பல தடவை நான் ‘போகிற போக்கில்’ புலம்பியிருக்கிறேன். பிரதம மந்திரி சர்ச்சில் சொற்பொழிவில் இணையில்லாத வெற்றி அடைகிறார்!—

உலகம் முழுதும் உலவிநிற்கும் நவீனக் கிளர்ச்சியின் மனோபாவத்தை அவர் அறியவில்லை—அறியவும் முடியாது. சுபாவத்தில் அவர் உண்மையான மாசற்ற ஜனநாயகத்தை நம்பவும் இல்லை—தேடவும் இல்லை. ஜனநாயகத்தின் அடிப்படையான கொள்கை “ஸர்வே ஜனா: சுகினோ பவந்து” என்ற உத்தமக் கொள்கை! இந்தக் கொள்கை அவர் மனதை இந்த நெருக்கடியில்கூட இளக்கவில்லை. அவருடைய சுய சரித்திரத்தை வாசித்த எல்லோரும் இதை நன்கு அறிவார்கள்.

இந்த 3 வருஷத்திய கொடிய போருங் கூட அவருக்கு ஒன்றும் கற்றுக்கொடுக்கவில்லை. அவர் பிரதம மந்திரியாக இருக்கும் வரையில் இந்தியாப் பிரச்சினையும் தீராது. பிரிட்டனுக்கும் விடுதலையும் வெற்றியும் கிடைப்பது துர்லபம்.

ஹிட்லரின் பாதிப் பலம் இந்தியாவின் அடிமைத் தனந்தான். இயந்திர

வுக்கு சுயராஜ்யம் கிடைத்த மறு நிமிஷமே ஹிட்லர் பலம் பாதிக்குமேல் குறைந்துவிடும். இந்த அந்தரங்க அரசியல் மந்திரத்தை எவர் உண்மையில் அறிவாரோ அவருக்குத்தான் பிரிட்டிஷ் பிரதம மந்திரி வேலை தகுதி. அவர்தான் இந்த யுத்தத்தில் வெற்றிபெறுவார்.

இந்த முறையிலேயே நான் இரண்டு வருஷமாக எழுதிவருகிறேன்.

பிரதம மந்திரி சர்ச்சிலின் மனோ தைரியமும், இணையில்லாத உழைக்கும் சக்தியும், பிரிட்டிஷ்—அமெரிக்க ஏக போக உரிமையைக் காப்பாற்றுவதில் தான் உபயோகப்படுகின்றன. விழலுக்கு இறைத்த நீர் போலாகும்.

* * *

இந்த நெருக்கடியில் நம்முடைய கடமை என்னவென்று நாம் தெளிவாய்த் தெரிந்துகொண்டு நடக்கவேண்டும். இல்லாவிட்டால் பின்வரும் ஐந்நூறு வருஷத்துக்குக் கேடுவரும். ஜப்பானுக்கும் இதர அந்நியர்களுக்கும் கால் வைக்க கால் அங்குலம் கூடக் கிடையாது. மூச்சுவிடக்கூட இடம்கிடையாது. அந்நியர் ஆட்சியே இனி இந்தியாவுக்குக் கிடையாது. இதைப் பிரிட்டனே ஒப்புக்கொண்டிருக்கிறது.

நவீன நாகரீகத்தில் யுத்தத்துக்கு அந்தரங்க காரணம் தொழில், வியாபார, லாப ஆசைதான். இதற்கு ஆங்கிலத்தில் சுருக்கமான அழகிய பெயர் Vested Interests. இந்தக் குட்டையில்தான் நமது நாகரீகத்தின் மேன்மையை அழிக்கும் விஷப்பூச்சி உற்பத்தியாகிறது. இதைத் தவிர்க்க ஒரே ஒரு வழிதான்.

கூட்டம் போட்டுக் கூச்சலிட்டு ஆர்ப்பாட்டங்கள் செய்து, கல்லை எறிந்து துப்பாக்கிகுண்டை வாங்கிக்கொண்டு ஜெயிலை நிரப்பி, வளர்க்கும் ஹிம்ஸா முறை கூடவே கூடாது. இவையெல்லாவற்றையும் நாம் அடியோடு ஒழிக்க வேண்டும். சொற்பொழிவுக்கு ஏற்பட்ட இருபது வருஷ 'சுக்கிர தசை' முடிந்துவிட்டது. இனிமேல் செயல் என்ற 'சூரிய தசை, அஹிம்ஸா வழியில் இந்தியாவுக்குப் புத்துயிரளித்து உலகத்தையே மேன்மைப் படுத்தும்.

'வெஸ்டட் இண்டரெஸ்ட்'டால் ஏற்பட்ட பிணிதான் பசி. பசியால் ஏற்பட்ட பிணிதான் யுத்தம். வருணபகவானும், சூரியபகவானும் அளவின்றி அளிக்கும் உணவை மூட்டைகட்டி ஒளிக்கும் துரோகிதான் 'வெஸ்டட் இண்டரெஸ்ட்'. இதற்கு நமது நாகரிகத்திலும், தர்மத்திலும் இடமேகிடையாது. இந்த நெருக்கடியில் இப்பிணியை ஒழிக்க ஒரேவழிதான் உண்டு. எல்லா ஜனங்களும், இந்தியாவிலுள்ள ஏழு லட்சம் கிராமங்களுக்குச் சென்று அங்கு உணவுப் பொருள்களை ஏராளமாய் அபிவிருத்தி செய்யவேண்டும், அங்கங்கு விளையும் பொருள்களைக் கொண்டு ஈசனைக் கும்பிட்டுத் தாழ்மையாகவும் மேன்மையாகவும் ஜீவனம் செய்யவேண்டும்.

நமது ஜீவனத்துக்கு அந்நிய பொருளைத் தேடினால் அந்நியர் ஆட்சிதான் தொடரும்.

நமது நாட்டிலுள்ள நாற்பதுகோடி மக்களும் ஒன்று சேர்ந்து ஒரு மனதாய் கிராம முன்னேற்றத்தை அஹிம்ஸா முறையில் ஒரு மாதம் கையாண்டால் இந்தியாவுக்கும், நேச நாட்டிற்கும் உலகத்திற்கும் விடுதலையும் வெற்றியும் நிச்சயம் ஏற்படும். 'வெஸ்டட் இண்டரெஸ்டு' பிறக்கும் குட்டையும் தூர்ந்து போகும்.

"ஸர்வே ஜனா: ஸுகினோ பவந்து" என்ற உத்தமக் கொள்கை ஓர் சர்வ ஜன சங்கம் மூலம் நிறைவேறும்.

காவிரிப்பூம்பட்டினம் 15—8—42 } மணி

# அரிசி

[அகில இந்திய கிராமத் தொழிற் சங்கத்தார் வெளியிட்டது]

ஆ. வே. ஜெயராமன் (தமிழ்ப்படுத்தியவர்)

## அத்தியாயம் 5

### (1) மெருகு போடாத அரிசி

நெல்லின்மேலுள்ள உமியை மட்டும் நீக்கினால் அந்த அரிசிக்குதான் மெருகு போடாத அரிசியென்று பெயர். அந்த அரிசி பழுப்பு நிறமாக இருக்கும். அந்த பழுப்பு அரிசியைத் தேய்த்தால் மேல் பழுப்பு நிறம்போய் வெள்ளை நிறம் வந்து விடும். இதற்குத்தான் மெருகு போட்ட அரிசி என்று பெயர். கடைகளில் கிடைக்கும் அரிசி அதிக மெருகு போட்டது.

தேய்ப்பதால் அழிந்துபோன அந்த பழுப்பு நிறத் தோலில்தான் உலோக உப்புகளும், வைடமின்களும் இருக்கின்றன. அந்த சத்துக்களை நீக்கிவிட்டால் அரிசியின் ஊட்டங்கொடுக்கும் பாகம் அழிந்து விடுகிறது. அந்த அரிசியை உண்பவர்களுக்கு அநேக வியாதிகள் வருகின்றன.

ஆகையால் சாப்பாட்டுக்கு மெருகு போடாத அரிசியையே உபயோகிக்க வேண்டும்.

### (2) மெருகுபோடுவதால் ஏற்படும் நஷ்டம்.

மெருகு போடுவதால் அரிசியின் பழுப்புத்தோல் மட்டும் அழிந்து விடுவதல்லாமல் அதனுடைய முளையும் சிதைந்து விடுகிறது. இவ்விரண்டிலுந்தான் அரைமட்டங்கு உலோக சத்துக்களும், நாலில் ஒருபங்கு புரோடீன்களும், எல்லா வைடமின்களும் அடங்கியிருக்கின்றன. ஆதலால் மெருகு போட்ட அரிசி சாப்பிடுவதால் தேக வளர்ச்சி குன்றுவது மட்டுமல்ல, அநேக வியாதிகளும் வருகின்றன.

ஆதலால் உங்களுடைய தேகத்தை ஆரோக்கியமாக வைத்துக்கொள்ளவும், பணச்செலவில்லாமல் பார்த்துக் கொள்ளவும் நீங்கள் விரும்பினால் மெருகு கொடுத்த அரிசியை உண்ணாதீர்கள்.

### (3) நஷ்டங்கள் விவரம்.

| | மதிப்பு. | நஷ்டம். |
|---|---|---|
| மெருகு கொடாத அரிசி | 100 | |
| மெருகு கொடுத்த அரிசி ஒரு தரம் | 45 | 55 |
| இரண்டுதரம் | 25 | 75 |
| மூன்று தரம் | 17.5 | 82.5 |

உங்கள் பணத்தைக் கொடுத்து பூரா மதிப்பையும் பெறவிரும்பினால் மெரு கொடாத அரிசியை வாங்குங்கள்.

### (4) உலோக சத்துக்கள் நஷ்டம்.

நெல்மெஷினில் கொடுத்து மெருகு போடுவதால் 54 சதவிகித பாஸ்பரஸும் 70 சதவிகித கால்ஷியமும், 55 சதவிகித இரும்பு சத்தும் அழிந்துவிடுகின்றன.

இந்த உலோக சத்துக்களெல்லாம் உடம்பை வளர்ப்பதற்கு இன்றியமையாதனவாகும்.

ஆதலால் கைக்குத்தல் அரிசியையே உபயோகிக்க வேண்டும். அதுவும் மெருகு கொடாத அரிசியாக இருக்க வேண்டும்.

### (5) மெருகு கொடுப்பதால் வைடமின் 1 B நஷ்டம்.

உடலை வளர்ப்பதற்கும், எலும்பொடிந்தாலும் அல்லது தசை குறைந்தாலும் அதைக் கூட்டுவதற்கும் இந்த வைடமின் 1 B அத்யாவசியமானது.

1. இருதயம், குலை, ஜீரணப்பை, மூத்திரக்காய் முதலியவைகளை ஆரோக்கியமாகவும் வன்மையாகவும் வைத்துக் கொள்ள உதவுகிறது.

2. தசைகளையும் இது வலுப்படுத்துகிறது.

3. ஜீரணசக்தியைக் கொடுக்கிறது.

4. இந்த வைடமின் குறைவினல் பெரி-பெரி என்னும் முடக்குவாதம் உண்டாகிறது. இவ்வியாதி நரம்புகளையும், இருதயத்தையும் பாதிக்கிறது. சில தடவை இதனல் இருதயமே நின்று விடும்.

**வைடமின் 1 B**

| | |
|---|---|
| மெருகுகொடாத அரிசி | 4–0 |
| ,, கொடுத்த அரிசி | 0–7 |

மில் அரைப்பினல் ஏற்படும் வைடமின் 1 B நஷ்டம்—சத விகிதத்தில் 82·5

ஆகையால் மெருகு கொடுத்த அரிசியை உண்டு இக்கொடிய வியாதியை வருவித்துக்கொள்ள நீங்கள் தயாரா?

### 6. மில் அரிசி உண்பதைவிடத் தவிட்டைத் தின்னலாம்

மில்லில் மெருகு கொடுத்த அரிசியை உண்பதைவிடத் தவிட்டைத் தின்னலாம். ஏனென்றல் தவிட்டில் ஊட்டம் கொடுக்கும் சத்துக்கள் இருக்கின்றன. தவிட்டையும் நாம் உபயோகிக்க வழிதேடவேண்டும்.

### (7) வெளுத்ததெல்லாம் பாலல்ல.

கடையில் மில் மெருகு அரிசி சங்கு வெள்ளை தோற்றுவிடும்போல அவ்வளவு வெளுப்பாக வைக்கப்பட்டிருக்கும். ஆனல் அதில் சிறிதுகூட புஷ்டிதரும் உணவே கிடையாது.

மெருகு கொடாத அரிசி வெளுப்பாக இல்லாவிட்டாலும், அதில் புஷ்டி தரும் சத்துக்கள் இருக்கின்றன.

சரியாக ஜீரணசக்தி ஏற்படாவிட்டால் மாத்திரைகளையும், சுகபேதி லேகியங்களையும் எடுத்துக்கொள்ளாதீர்கள்.

மெருகு கொடாத கைகுத்தல் அரிசியையும், கை அரைப்பு மாவையும் உபயோகியுங்கள்.

### (9) யார் முட்டாள்?

முட்டாள்தான் தவிட்டை உண்டு அரிசியைத் தூர எறிவான்.

மில் அரிசி உண்பவர்கள் இந்த இனத்தவர்கள்தான்.

அரிசியின் முளையிலும் மேல் தோலிலும் தான் புஷ்டிதரும் ஆகாரங்கள் இருக்கின்றன. மில் அரிசியில் இவைகளில்லை.

### (10) மெருகு கொடாத அரிசி கொடுக்கும் ஜீரண சக்தி.

மெருகு கொடாத அரிசி சாப்பிடுவதால் ஜீரணசக்தி ஏற்படாது என்று சிலர் கூறுவார்கள். அது சுத்த தவறு. மெருகு கொடாத அரிசியைச் சாப்பிட ஆரம்பித்தால் அதனல் ஜீரண சக்தி கெடவே கெடாது. ஆனல் மெருகு கொடாத அரிசியைக் கொஞ்சம் குறைத்துச் சாப்பிடுவதே நலம்.

### (11) மெருகு அரிசி உண்பதால் உண்டாகும் வியாதிகள்.

மெருகு கொடுத்த அரிசியிலும், வெள்ளை கோதுமை மாவிலும் போதுமான அளவு வைடமின்கள் இல்லாததால், எலும்பு பல் முதலியவைகளின் வளர்ச்சிக் குன்றுவதல்லாமல் அவைகளுக்கு வியாதிகளும் சம்பவிக்கின்றன

அதைத் தவிர, இருதயம், சுவாசப்பை, மூத்திரகாய் முதலியவைகளையும் வியாதி பீடிக்கின்றன.

### (12) அரிசியிலுள்ள வைடமின் A

உடல் வளர்ச்சிக்கும், வியாதி வராமல் தடுப்பதற்கும் இந்த வைடமின் A முக்கியமானது. மெருகு கொடுத்த அரிசியில் இந்த வைடமின் கொஞ்சங்கூட இல்லை என்றே கூறலாம். நெல்லை புழுக்கும்பொழுதும் இந்த வைடமின் அழிந்துவிடுகிறது. ஆதலால் மெருகெடாத பச்சையரிசியே உத்தமம்.

### (13) வைடமின் 1 B

நெல்லைக் குத்திச் சிறிது தண்ணீர் கலந்து புறுவுக்குத் தீனிபோட்டால் அவைகள் கொழுத்து வளருவதைக் காணலாம். அடுத்தாற்போல மில் மெருகு அரிசியைப் போட்டால் புறுக்கள் மெலிந்து போவதல்லாமல் வியாதியாலும் துன்பப்படும். பறவைகள் வளருவதற்கு வேண்டிய சத்து மில்லில் அரைத்து மெருகு கொடுப்பதால் சிதைந்து விடுகின்றன. அந்த சத்துதான் வைடமின் 1 B.

### (14) புழுங்கல் அரிசி.

நெல்லை 48 அல்லது 72 மணி நேரம் தண்ணீரில் ஊறவைத்து அதன் பிறகு 15 நிமிஷம் பொங்கவைத்துப் பிறகு வெய்யலில் 12-மணிநேரமும், நிழலில் 2-மணி நேரமும் காயப்போட்டு கைக்குத்தலால் குத்தியோ அல்லது மில்லில் அரைத்தோ எடுக்கும் அரிசிக்குத்தான் புழுங்கல் அரிசியென்று பெயர்.

நெல்லைப் பொங்கவைக்கும்பொழுது அரிசியின் மேலுள்ள உலோக உப்புகளும், வைடமின்களும் அரிசிக்குள் சென்று விடுகின்றன. ஆகையால் மில்லில் அரைத்தாலும் அந்த சத்துக்களை அழிக்கமுடியாது.

---

## நாஷனல் இன்ஷூரன்ஸ் கம்பெனியாரின் விசேஷமான முன்னேற்றம்.

சென்ற 1941ௐ டிசம்பர்மீ முடிவான நாஷனல் இன்ஷூரன்ஸ் கம்பெனியாரின் நிர்வாகிகளின் 35-வது யாதாஸ்துவில் கண்டபடி இந்த யுத்த பீதியிலும் ஷை கம்பெனி சிலாகிக்கவேண்டிய அளவு முன்னேறியிருப்பது ஒரு குறிப்பிடத்தக்க விஷயம்.

கடந்த வருஷத்தில் புதியதாக 8986 பாலிஸிதாரர்கள் ரூ. 1,67,60178க்கு வாக்களித்தப் பாலிஸியுடன் சேர்ந்திருக்கிறார்கள்.

சென்ற வருஷத்தில் மரணத்தின் காரணமாய் ஆயுள் பாலிஸிதார்களுக்கு ரூ. 10,57,774—11—6யும் என்டென்மெண்ட் காலம் இறுதியடைந்தால் ரூ. 17,08,293 யும் வாக்களித்தபடி கம்பெனியாரால் கொடுக்கப்பட்டது.

இன்ஷூரன்ஸ் கம்பெனியின் ஆஸ்தி சென்ற வருஷம் ஆரம்பத்தில் இருந்ததைவிட ரூ 23,45,582—12—2 அதிகமாகி ரூ. 3,69,81,039—8—5 ஆக விருத்தியடைந்திருக்கிறது.

கம்பெனியாரின் முதல்பங்குகளில் போட்டு ஈட்டிய வட்டி ஆதாயம் ரூ. 1588,511—3—2 ஆக இருக்கிறது. மிற்க யுத்த அரக்கனின் இலக்குக்கான கோலாலம்பூர் ரங்கூன் ஆகியவிரண்டு இடங்களில் நிர்வாகம்செய்து வந்த ஷை கம்பெனியின் கிளை ஆபீசுகள் தற்சமயம் வேலைசெய்ய முடியாததால் தலைமைக் காரியாலயமே அங்கிருந்து வெளியேறிய பாலிஸிதார்களுடன் தொடர்பு வைத்துக்கொண்டிருக்கிறது. கம்பெனியரின் ஆஸ்தி பொருளனத்தைக் காண ஷை இரண்டு கிளைக்காரியாலயங்களுக்கு ஏற்பட்ட சேசம் மிகசொற்பமே. ரங்கூன் காரியாலயக்கூட்டம் விரோதிகளால் நாசமின்றி கைவசமாக்கப்பட்டிருக்கிறது என்று கம்பெனியார் எண்ணுகிறார்கள். மிற்க, தற்கால நிலையில் கம்பெனியார் நம்பிக்கைக்கு பங்கமின்றி நிர்வாகம் செய்துவருவதானது பொதுமக்களுக்கு ப்ரீதியைக் கொடுக்கும் என்றே சொல்லவேண்டும்.

# பெரும் புகழ்

(“தில்லை வெளியிலே கலந்து விட்டாலவர்
திரும்பியும் வருவாரோ” என்ற வர்ணமெட்டு.)

பனிபோல் உயிர்கள் பிறந்தபின் வளிபோல் மறை
வதின் நுட்பந்தனையாய்ந்தால்
துவக்காம் பிறப்போடிறத்தலின் முறையாதென
தெளிந்திட்டின் புறலாமே.

காலை மலரும் மலர்கள் மாலை இறத்
தலையொப்ப ஞாலத்தில்
மக்கள் பிறந்து வளர்ந்திட் டோர்நாளிறத்
தலுந்திண்ணம் திண்ணமே.

விண்ணில் ஆதித்தன் விளங்கு மிப்பூமியில்
மனிதர்கள் அனைவோரும்
பேய்கள் தோற்றம்போல் பிறந்து பொய்நாடகம்
நடித்தபின் மறைவாரே.

தரையில் சீருள்ள அரங்க மிப்பூமியில்
மனமுவப் புடனுற்றி
இறைவன் நாமமும் துதிசெய் திட்டாலவர்
பெரும்புகழ் அடைவாரே.

மன்னிய வுலகில் மனிதர் அன்போடருள்
பொருந்திய மனத்தாலே
மன்னுயிர் புரந்து பதத்துண் டிட்டாலவர்
பெரும்புகழ் பெறுவாரே.

அ. ஆறுமுகம்

# நாகூர் ஆண்டவர்

## ஸ்ரீ. ஸே.

செவ்வானம் கொஞ்சம் கொஞ்சமாக இருண்டு கொண்டிருந்தது. மேற்கே வெகுதூரத்திற்கப்பால் தர்காவின் உச்சி தலைநிமிர்ந்து, வெண்மை உருவத்துடன் தெரிந்தது. அதன் உப்பரிகைச் சாளரத்தினின்று மகுடி சப்தத்தையொத்த துருக்கிய வாத்தியத்தின் இனிமையான ஒலி மிதந்து வந்தது. அந்திக் காக்கைகள் சில கண் தெரியாமல் அங்கு வட்டமிட்டுத் தவித்தன. அவற்றுடன் புறாக்கள் சிலவும் சேர்ந்து பறந்து கொண்டிருந்தன.

கடலோரத்தில் அலைகள் என் கால்களில் விழுந்து புரள, உலவியவண்ணம் நான் மேற்கே நோக்கிக்கொண்டிருந்தேன். புல்லும் புதரும் மண்டிப் போயிருந்த மணல் முட்டுகளும், வெகு தூரத்தில் அவற்றிற்குப் புகைப்படலமாக அமைந்துள்ள ஆண்டவருடைய தர்காவும், என் மனத்தைக் கவர்ந்துவிட்டன.

தனிமையிலேயே பித்துப்பிடித்த எனக்குச் சந்தடி நிரம்பிய கோயில்களுக்கும், திருவிழாக்களுக்கும் போகப் பிடிக்காது. அங்கே போகிறவர்களைப் பற்றி நான் மட்டமான அபிப்பிராயம் கொள்ளுவதுகூட உண்டு. ஆனால்—அந்த தர்கா மந்திரக்கோலாக இருக்க வேண்டும்! இல்லாவிட்டால் என் உள்ளத்தை அது எப்படி வசீகரிக்கமுடியும்?

"சக்ரபாணி, வீட்டுக்குப்போகிற வழியில்தானே தர்கா இருக்கிறது?" என்று கேட்டேன்.

"என்—அங்கு போகவேண்டுமா?...." என்று வியப்புடன் வினவினன் என் நண்பன். நான் பதில் பேசவில்லை. பதில் சொல்லத் தெரியவில்லை—என் கொள்கைக்கு விரோதமான காரியமாயிற்றே!

தர்கா முழுவதும் சக்கரபாணி என்னை 'இழுத்து'க்கொண்டு போனான். ஒவ்வொரு சமாதியையும் காண்பித்து விளக்கிக்கொண்டே வந்தான். பாவம்! அவன் வாய்வலிக்க மிகவும் சிரமப்பட்டு என்னென்னவோ சொல்லிக் கொண்டிருந்தான். அச் சமாதிகளைக் காணக்காண என் மனம் எங்கேயோ கற்பனை உலகில் சஞ்சரிக்க ஆரம்பித்து விட்ட விஷயம் அவனுக்கு எப்படித் தெரியும்!

ஆண்டவர் எவ்வளவு சுகமாக நித்திரை செய்கிறார்! அவரைச்சுற்றி நாலாப் புறமும் முல்லை மொட்டுப் போன்ற அகல் வெளிச்சங்கள். எல்லாம் எண்ணெய்த் தீபங்கள். சாம்பிராணி வாசனை எவ்வளவு சொகுசாக இருக்கிறது! மனோகரமான இந்த இடத்தில் ஆண்டவருக்குத் தலையணையும் காலணையும் மயில் தோகை! ஆஹா! கொடுத்துவைத்தவர் அவர்—அநுபவிக்கிறார்! என்ன நிம்மதி அவருக்கு! அந்த நிம்மதி கலையாமல் இருப்பதால் தான் ஆண்டவருக்குச் சக்தியும் ஏற்படுகிறதோ!

அவருடைய சமாதியைக் கண்டது முதல் நான் அவர்மீது பொறாமை கொண்டேன். தன்னலமும், சூதும் வாதும் உருவெடுத்த மானிட ஜந்துக்கள் உழலும் உலகத்து அரவமே கேட்காதபடி, ஹாய்யாக, நிச்சிந்தையாக, நீண்ட தூக்கத்தில் ஆழ்ந்துகிடக்கிறார். அவரைப்போல, சமாதிக்குள் அழுந்தி உலக அல்லல்களிலிருந்து தப்பித்துக் கொள்ளவேண்டுமென்று எனக்கு மனசு துடித்தது. சுயநலம் ஆண்டவரைக் கூடப் பிடித்துவிட்டதா—தமக்கு மட்டும் வழிதேடிக்கொண்டு, நம்மையெல்லாம் தவிக்கவிட்டுப் போய்விட்டாரே என்று மனமொடிந்து சிந்தனையிலாழ்ந்தேன்.

உள்ளே இருந்த கூட்டத்தை விலக்கிக்கொண்டு என் நண்பனுடன் வெளியே வந்தேன்.

"இப்படிச் சற்று உட்கார்ந்துவிட்டுச் செல்லலாம். இப்பொழுது என்னுல் நடக்கமுடியாது. மூளை எங்கேயோ சுற்றிக்கொண்டிருக்கிறது. அதை மெள்ள உலகத்துக்குத்திருப்பி அழைத்து வரச்சிறிதுநேரமாகும்." என்று சொல்லி தர்காவின் முற்றத்தில் உட்கார்ந்துவிட்டேன்.

ஏதோ ஒரு மாதிரியாக சக்ரபாணி என்னை நோக்கினுன்.

"சக்ரம், மனுஷ்யன் மிகவும் அகம் பாவம் பிடித்தவன். ஆவனுல் உலகிற்கு என்ன பயன்?" என்று திடீரென்று ஆரம்பித்தேன்.

"என், கதை எழுதுவதுதான்!" என்று சொல்லிவிட்டு, "எழுந்திரு போவம்!" என்று என்மனத்தை வேறு திசையில் திருப்ப முயன்முன்.

நான் தொடர்ந்து சொல்லலானேன்: "பார் சக்ரம்; பன்றி, கழுதை, என்—தாவர வர்க்கங்கள் முதற்கொண்டு ஆண்டவன் படைப்பிலுள்ள எல்லாப் பிறவிகளும் எதாவது ஒருவிதத்தில் பிற ஜீவன்களுக்குப் பிரயோஜனமாக உள்ளன. ஆனுல் மனிதனுல் எந்த ஜீவ ராசி பயனடைகிறது?........ பாரேன்! இறந்தபின் உடலைப் புதைத்தால், பூமியிலுள்ள புழுக்களும் பூச்சிகளும் அவ்வுடலைத்தின்றுவிடுமென்று நினைத்துத் தானே உடலைப் **பொசுக்க** விரும்புகிறது மனுஷ்யக் கும்பல்? கேவலம் புழு, மனித உடலைத் தின்றுவிட்டால் மனித சமூகத்தின் கௌரவமும் அந்தஸ்தும் குறைந்துபோய்விடுமாம்! என்ன அகம் பாவம்! செத்த பிறகுகூட அகம்பாவம் உடையது இந்த மானிட ஜாதி!

"உயிருடன் உள்ள வரையில் மனிதனுல் யாருக்கும் பயனில்லை. இறந்த பின்னவது அவன் பிற ஜீவனுக்குப் பிரயோஜனமுள்ளவனுகலாம். எவ்வளவு கோடிக்கணக்கான புழுக்கள் அவ்வுடலைப்பெற்ற மனுஷ்யனை வாயார வாழ்த்தி விருந்துண்ணும்! அந்தப் புண்ணியமே போதுமே, மனிதன் செய்த எல்லாப் பாபங்களையும் போக்கடிக்க. திமிர் பிடித்தவன் அல்லவா, உடலைப் பொசுக்குவதுதான் அவனுடைய கிரீடத்தைக் காப்பாற்றுமாம்!

"ஆண்டவர் இருந்தும் பயன்பட்டார். இறந்தும் பயன்படுகிறுர். சீதக்காதி மரைக்காயரைத் தோற்றுவித்த வமிசம் பின் எப்படி இருக்கும்?........"

என் நண்பன் பரிகாசம் தொனிக்கும் குரலில் "ம்ஹ்!.... அப்புறம்?" என்று கேட்டான்.

"....நான் இறந்தால் என்னை எரிக்கக் கூடாது! பூமியில் புதைக்கவேண்டும்.... யாருக்காவது பிரயோஜனமுள்ளவனுக நான் ஆகவேண்டுமல்லவா, அதற்காக!" என்று சொல்லிவிட்டு, "உனக்கு என்ன தோன்றுகிறது?" என்று கேட்டேன்.

"எனக்கா?........ மூளை குழம்பியிருப்பதால் இதுவும் பேசுவாய், இன்னமும் பேசுவாய் என்று தோன்றுகிறது!" என்று சாவதானமாகப் புன்சிரிப்புடன் சொன்னுன் என் நண்பன்!

# மகாராஜாவின் விருந்து

ஏ. எஸ். பஞ்சாபகேச ஐயர், எம். ஏ., ஐ. ஸி. எஸ்.

**கடைசியாக ஜயராமனுடைய ஜன்மம் சாபல்யமாயிற்று. மகாராஜாவின் விருந்துக்கு அழைப்பு வந்தது. அந்தப் பெரிய அழைப்புப்பத்திரம் கையில் கிடைத்ததும் அவன் ஆனந்த நடனமாடினான்......பாவம்! அவன் அநுபவித்த அந்த விருந்தின் கதை இது.**

ஜயராமன் பத்தாயிரம் ரூபாய்க்கு அதிபதி. ஒரு அழகிய வீடும் அவனுக்குச்சொந்தமாய் இருந்தது. அன்பு கொண்ட மனைவியும் ஆசைக் குழந்தைகள் அறுவரும் அவன் வீட்டை அலங்கரித்தார்கள். ஆயினும் அவன் மட்டும் பிறிதோர் பொருளை இச்சித்திருந்தான். என்றைக்காவது ஒருநாள் மகாராஜாவின் விருந்துக்குப் போகவேண்டுமென்ற ஆசை அவன் உள்ளத்தில் சதாநேரமும் குடிகொண்டு நின்றது. அந்த ஆவலைப் பூர்த்தியாக்குவதிலேயே அவன் கண்ணும் கருத்துமானான். பெரிய அரண்மனை உத்தியோகஸ்தர் முதல் மகாராஜாவின் சேவகர்கள் வரையில் அனைவரையும் அவன் கலந்தாலோசித்தான். பின்னால் விளையும் பயிருக்காக முதலில் நிலத்தைக்கொத்திப் பண்படுத்தவேண்டுமல்லவா? அதுபோல, ஜயராமனும் தனக்குக் கிடைக்கப்போகும் பாக்கியத்தைக் கருதி அதிகாரிகளுக்கெல்லாம் அறுசுவையோடும் விருந்துகள் அளித்தான். தன் நோக்கம் சித்தியாக, அங்குமிங்கும் அலைந்து பலரையும் கண்டு பேசினான். பணத்தை வாரியிறைத்தான். மனைவிமக்களையும் மறந்தான். அவர்கள் அவன்மீது வைத்த அன்பு முழுவதும் பாலைவனத்தில் பெய்யும் மழைபோல் வீணாயிற்று. குழந்தைகளிடம் ஜயராமன் கொஞ்சி விளையாடுவான்; ஆனால் அதிலே ஆர்வம் இராது. இல்லாளிடம் அன்புபாராட்டுவான்; ஆனால் அதில் உயிர் இராது. ஜயராமனுடைய உள்ளத்தை அவன் மனைவி நன்கு அறிந்தாள். ஆயினும் என்செய்வது? அவனுடைய நிலைமையைக்கண்டு அவள் இரங்கினாள். முன்னிலும் பன்மடங்கு அந்த உத்தமி அவன்மீது அன்புபூண்டாள். குழந்தைகளும் தங்கள் தந்தையின்போக்கை ஒருவாறு உணர்ந்துகொண்டனர். அதன்பின் அவனை நெருங்கவும் அஞ்சினர். அபூர்வமாக வீட்டுக்குவரும் எவரிடமும் கூடிப் பழகியதைப்போல குழந்தைகள் தம் தந்தையிடம் பழக முற்படவில்லை.

கடைசியாக ஜயராமனுடைய ஜன்மம் சாபல்யமாயிற்று. மகாராஜாவின் விருந்துக்கு அழைப்பு வந்துசேர்ந்தது. அந்தப் பெரிய அழைப்புப்பத்திரம் கையில் கிடைத்ததும் அவன் ஆனந்த நடனமாடினான். அதன் மின்னும் ஓரங்களையும், மத்தியில் "ஸ்ரீமான் ஜயராமன்" என்ற வரியையும் கண்டு அவன் பேருவகை பூத்தான். மூலையில் 4987 என்ற இலக்கம் பொறிக்கப்பட்டிருந்தது. பின் வரும் விளைவை யறியாது அவன் மனைவி மக்களும் அவனோடு சேர்ந்து களித்தார்கள்!

விருந்துக்குப்போக ஜயராமன் ஆயத்தமானான். அழகிய உடைகள் வாங்கினான். இந்த அழைப்புக்குக் காரணமாயிருந்த உத்தியோகஸ்தருக்கும் சேவகர்களுக்கும் நல்ல சன்மானங்கள் வாங்கினான். பெருமிதத்துடன் முடிவில் ஒரு முதல் வகுப்பு ரயில்வண்டியில் ஏறி உட்கார்ந்தான். மகாராஜாவின் விருந்தாளி கீழ் வகுப்புகளில் பிரயாணம் செய்வது கேவலமல்லவா? ரயிலடியில் மனைவி மக்கள் அவனுக்கு முகமலர்ச்சியுடன் விடைகொடுத்தனுப்பிவிட்டு வீடுதிரும்பினார்கள்.

வீட்டைத்தவிர இனி அவர்களுக்கு வேறு ஆஸ்தி யில்லை. கையிலிருந்த

ப்ணம் ஜயராமனுடைய பிரயாணத் துக்கே சரியாயிருந்தது. ஆனல் அவனே இதையெல்லாம் சிந்திக்காமல் இணை யற்ற ஆனந்தத்துடன் வெகுவேகமாகத் தலைநகரை நோக்கிப் போய்கொண் டிருந்தான்.

மனைவி துக்கத்தில் ஆழ்ந்தாள். சில நாட்களில் உணவும் பஞ்சமாகுமே என அவள் கண்ணீர் வடித்தாள். பிச்சை யெடுப்பது அவமானம். வீட்டு வேலைதவிர வேறு தொழிலே அறியாள். பிறரிடம் சென்று ஏவல் செய்யவும் அவள் மனம் ஒருப்படவில்லை. அவளுடைய அழகிய வதனத்தில் நிலவுசெய்த சிரிப்பு மறைந்தது. மனத்தில் இருள் சூழ்ந்தது. அவள் நெஞ்சத்தில் ஏக்கம் குடிகொண்டது.

அக்கம் பக்கத்தார் அறியாமல் வீட்டி லிருந்த இரண்டு பட்டுச் சேலைகளைப் பாதிவிலைக்கு விற்ருள். அந்தப் பணத் தைக்கொண்டு குழந்தைகளுக்கு அரை வயிற்றுக்கு அன்னமிட்டுப் பாதுகாத் தாள். போதுமான பொருளுடன் தந்தை சீக்கிரம் திரும்பி வந்துவிடுவாரென அவர்களுக்கு ஆறுதல் கூறினள்.

மூத்தமகள் கேட்டாள்: "அம்மா, மகாராஜா அப்பாவை ஏன் அழைத் திருக்கிருர்? மந்திரியாக்குவதற்கா, அல் லது வேறு பெரிய உத்தியோகம் தருவதற்கா?"

"அப்படித்தானிருக்கும். பார், எத்தனை உத்தியோகஸ்தர்கள் அப்பாவை வரச் சொல்லி அழைத்திருக்கிருர்கள்!" என இளையாள் பதில் அளித்தாள்.

மூன்ரும் பையன் இடையில் நுழைந் தான். "அப்பா ஏன் அங்கேபோய் அவர்களைப் பார்க்கவேண்டும்? அவர் களெல்லாம் இங்கே வந்தாலென்ன?" என்று ஒரு கேள்வியைப் போட்டான்.

"மூடா வாயை; உனக்கு விஷயம் தெரியாது. இங்கேவந்து அவர்கள் அப்பாவுடன் பெரிய ராஜாங்க ரகசியங் களையெல்லாம் நமக்கெதிரிலா பேசுவார் கள்!" என மூத்த பெண்கள் அவனை அடக்கினர்கள்.

பத்துநாட்கள் கழிந்தன. அதற்கப் புறம் அரை வயிற்றுச் சோற்றுக்கும் பஞ்சம் வந்தது. விலைசெய்யவோ வீட்டில் வேறு பொருள்கள் இல்லை. ஆகவே அரைவயிறு கால்வயிருயிற்று. தாயும் மக்களும் மெலிந்தனர் எனினும் தைரியத்தைக் கைவிடாது காலங்கடத்த லாயினர். தந்தை வீடு திரும்பும்போது பெரிய சம்பத்துடன் வருவாரென்று அவர்கள் மனக்கோட்டை கட்டினர் கள். இந்த எண்ணம் வீணென்பதைத் தாய் அறிவாள். ஆனல் உண்மையைச் சொன்னல் குழந்தைகள் கலங்கு வார்களேயென அவள் அஞ்சினள். அவளும் அவர்களுடன் சேர்ந்து ஜயராமன் என்னென்ன கொண்டுவரு வான் எனக்கணக்கிட ஆரம்பித்தாள். இப்படியாக நாட்கள் அதிகமாகஆக பசிப்பிணியும் அதிகமாயிற்று. அவர்கள் கட்டிய மனக்கோட்டையும் கொஞ்சம் கொஞ்சமாக இடியத்தொடங்கியது.

ஜயராமனே தலைநகரம் போய்ச் சேர்ந்ததும் தான் கொண்டுபோன சன்மானங்களை யெல்லாம் வழங்கினன். தனக்கு உதவிசெய்த அதிகாரிகளுக்கும் சேவகர்களுக்கும் மனப்பூர்வமாக நன்றி பாராட்டினன். ஹோட்டல் ராயலில் வெகு ஆடம்பரமாகப் பொழுதுபோக்கி விருந்து நன்னளை எதிர்பார்த்திருந்தான்.

குறிப்பிட்டநாளில் அவன் அழகிய வாடகை மோட்டாரில் ஏறி விருந்து மண்டபத்தை அடைந்தான். அதைக் கண்டதும் இது சொர்க்க பூமியோ என ஐயுற்றுன். அலங்கார தீபங்களும் அழகு வேலைப்பாடுகளும் அவன் கண் ணைக்கவர்ந்தன. நெஞ்சம் இன்பவெறி கொண்டு துள்ளியது. பாரசீகத்து ரத்ன கம்பளங்கள், இத்தாலியப் பளிங்கு மேஜைகள், வனப்புமிக்க சீனக்கலசங் கள்!—என்ன ரமணீயமான காட்சி!

மேஜைகளின்மேல் விலைமதிக்கவொண்ணாத பட்டுத்துணிகள் ஒளிசெய்தன. அரிய பூப்படிக்கங்களும் காணக்கிடைக்காத மலர்க்கொத்துக்களும் ஒவ்வொரு மேஜையையும் அலங்கரித்தன. ஆடவரும் அழகிய மாதரும் சர்வாலங்கிருத பூஷிதராய் மண்டபமெங்கும் கூடியிருந்தனர். பிரசித்திபெற்ற பாண்டுவாத்தியக்காரர்கள் இன்னிசை முழக்கினார்கள். என்ன கோலாகலம்!

ஜயராமன் காலியாயிருந்த ஒரு ஆசனத்தில் அமர்ந்தான். அவன் முகம் மலர்ந்தது. ஆனால் அதே நிமிஷத்தில் அரண்மனை ஹவில்தார் ஒருவன் சினக்குறிப்புடன் அவன் முன்தோன்றினான். தோளைப்பிடித்துக் குலுக்கி "இங்கே என்ன செய்கிறாய்," என்று அதட்டினான். ஜயராமன் அழைப்புச் சீட்டைக்காட்டினான். "இது 124-ம் ஆசனம். உன்னுடையதோ 4987. அதோ அங்கே எழுந்துபோ," என்று ஹவில்தார் அலட்சியமாகக் கைகாட்டினான். "விருந்திலும் இந்த வரிசைக்கிரமம் உண்டா?" என்று ஜயராமன் ஆச்சர்யப்பட்டான். "உண்டு. முதல் வரிசைகள் உன்னைப்போன்றார்க்கல்ல. எழுந்திரு," என ஹவில்தார் அவசரப்படுத்தினான். ஜயராமனுடைய நெஞ்சு துடித்தது. ஆத்திரம்வந்தது. 'இந்த அநீதியை எதிர்ப்பேன்,' என்று எண்ணுபவன் போலத்தென்பட்டான். ஆனால், நல்ல காலம்! வருஷக்கணக்காக அவன் அதிகாரிகளுக்குப் பயபக்திபூண்டு நின்றது வீண்போமா? அந்த வழக்கம்தான் மாறுமா? "சரி என் இடத்தைக்காட்டுங்கள்" என எழுந்தான். உடனே ஹவில்தாரின் கையில் ரூபாய் நோட்டொன்றைத் திணித்தான். ஹவில்தாரோ வாய்பேசாமல் அதைத்தன் சட்டைப் பையில் போட்டுக்கொண்டு கம்பீரமாக முன்னால் நடந்தான்.

நூற்றுக்கணக்கான அழகிய பீடங்களைத்தாண்டி அவர்கள் சென்றார்கள். அப்புறம் கொஞ்சம் மட்டமான ஆசனங்கள், அதற்கப்புறம் இன்னும் ஒழுங்காக அவர்கள் கடந்தார்கள். முடிவில் பிரதான மண்டபத்தையும் தாண்டி வெளிப்புறத்தில் ஒரு மூலையை அடைந்தார்கள். கண்ணைக்கவரும் தீபாலங்காரமும் மறைந்துபோயிற்று. "வெகு நேர்த்தி! எனக்கு இங்கேயா இடம்? நீர்ப்பாசன வாய்க்காலின் கோடியில் இருக்கும் வயலைப்போல," என்று ஜயராமன் கேட்டான். அதற்கு ஹவில்தார் "ஆமாம் பின் எங்கே இருக்கும்?" எனப் பரிகாசம் செய்தான். "5000 விருந்தினரில் நீ 4987-ம் ஆள் தெரிகிறதா?" என்று அவன் வெறித்தான். 'ஆனால் மீதிப்பேரெல்லாம் எங்கே?' என ஜயராமன் சந்தேகப்பட்டான். "வருவார்கள்," என்று சொல்லிக்கொண்டே ஹவில்தார் அவனை ஒரு சிறு மேஜைக்கு இட்டுச்சென்றான். அது இருதூண்களுக்கு மத்தியில் ஒடுங்கிக் கிடந்தது. 4987, 4988, 4989, 4990 ஆகிய நான்கு ஆசனங்களும் அங்கே இருந்தன. ஹவில்தார் 4997-ஐச் சுட்டிக்காட்டினான். ஜயராமன் பேசாமல் அதில் உட்கார்ந்தான். மற்ற மூவரும் ஏற்கெனவே தங்கள் இடங்களில் அமர்ந்திருந்தார்கள். அவர்களுடைய முகத்தில் சந்தோஷம் தாண்டவமாடியது.

ஜயராமன், மகாராஜாவின் சிங்காதனம் வெகுதூரத்தில் இருக்கக்கண்டான். விரைவில் விருந்தினர் அனைவரும் வந்துசேர்ந்தனர். மகாராஜாவுக்கு இருமருங்கிலுமிருந்த ஆசனங்களெல்லாம் நிறைந்தன. சரியாக எட்டுமணிக்குப் பரிவாரங்கள் புடைசூழ மகாராஜா மண்டபம் வருவார். மணி 7-55 ஆயிற்று. "சிம்மாசனத்துக்கு வலது பக்கத்தில் உட்கார்ந்திருப்பவர் யார்?" என ஜயராமன் கேட்டான். "முதலில் பிரதம விதூஷகன், அப்புறம் மகாராஜாவின் மைத்துனன், அரண்மனைக் கார்ரியஸ்தன், முதல் மந்திரி, பிரதான ராஜசேவகன், அதற்கப்புறம் பிரபல எஃகு வியாபாரி, ராஜநர்த்தகி, ஒற்றர் தலைவன், அரண்மனைப் பொக்கிஷதாரி, அதன்பின் குதிரைப்பந்தய நிர்வாகி, லாட்டரி கமிஷனர், கடைசியில் அசுவ

ஜாக்கி," எனப்பதில் கிடைத்தது. "இட்புறத்தில் மஹாராணி, மூத்த அரச குமாரி, மாந்திரிகன், பத்திரிகை முதலாளி, மல்லர் தலைவன்," என்று ஹவில்தார் அடுக்கினன். "போதும், போதும்" என ஜயராமன் கூச்சலிட்டான். "என்ன வெட்கக்கேடு! நான் ஏன் இங்குவந்தேன்? மனைவியை மறந்தேன். அருமைக் குழந்தைகளையும் கைவிட்டேன். என்னைப் புழுவென இகழும் அற்பர்களைப் புகழவோ இங்கு வந்தேன்! வழிவிடுங்கள் நான் போக வேண்டும்" என எழுந்தான். ஹவில்தார் தடுத்தான். "நீ இப்பொழுது போக முடியாது. மகாராஜா வரும்நேரமாயிற்று உட்கார்," என உத்தரவிட்டான். அருகில் இருந்த மூன்று விருந்தினரும் "உட்கார், உட்கார்" என்றுகத்தினர்கள்.

ஜயராமன் உட்கார்ந்தான். எதிரில் இருந்த தட்டத்தை எடுத்துப் பளிங்கு மேஜையின்மீது மோதினன். அது இரண்டு துண்டாகி நொறுங்கியது. ஹவில்தாரும் அண்டையிலிருந்த மூன்று விருந்தினரும் மலைத்துப் போனர்கள். சுற்றியிருந்தவர்களோ இந்த வேடிக்கையைக் கண்டுகளித்தார்கள். தூரத்தில் நின்ற ஹவில்தார்கள், "அவனை வெளியேற்றுங்கள். அந்தப் பைத்தியக்காரனைப் பின்புற வாயிலாகக் கடத்துங்கள்," எனக் கூவினர்கள். "நானு பைத்தியக்காரன்! பைத்தியக்காரர்கள் நீங்களே; உங்கள் விவேகம் எனக்கு வேண்டாம்," என்று கூச்சலிட்டுக் கொண்டே ஜயராமன் வெளியேறினன். அப்போது தான், மஹாராஜா, பேரிகை முழங்கவும், தாரைகள் ஊதவும், பரிவாரங்கள் புடைசூழவும் மண்டபத்தில் நுழைந்தார்.

"பிழைத்தேன். பொய்யும் ஏமாற்றமும் நிறைந்த இந்த வீணர் கூட்டத்தில் இருந்து விடுபட்டேன்," என ஜயராமன் மகிழ்ந்தான். தான் இறங்கி யிருந்த ஹோட்டலைநோக்கி விரைந்துநடந்தான். விருந்துக்கு அழைப்புவந்தபோது அவன் அடைந்த ஆனந்தத்தைவிடப் பன்மடங்கு குதூகலம் அவன் உள்ளத்தில் எழுந்தது. "அது வெறும் மயக்கம் இதுவே உண்மையான இன்பம்," என்று அவன் முறுவல் பூத்தான். ஆனல் அடுத்த வினடி அந்தப் புன்சிரிப்பு மறைந்தது. மனைவியும் குழந்தைகளும் என்ன செய்கிறார்களோ என்னுமெண்ணம் அவனை வருத்தத்தொடங்கியது. "நான் இரக்கமற்ற பாவி. அவர்களுடைய உணவுக்குக்கூட ஒன்றும் வைக்காமல் வந்துவிட்டேனே," என அங்காலாய்த்தான்.

விருந்தைவிட்டு ஜயராமன் திடீரென்று திரும்பிவந்ததைக்கண்ட ஹோட்டல் முதலாளி ஆச்சரியப்பட்டான். "வீட்டில் ஏதாவது அவசரமா?" என்று கேட்டான். "ஆம் மிகவும் முக்கியமான காரியம். நான் உடனே போகவேண்டும் உமக்குச்சேரவேண்டிய தொகையென்ன? சொல்லும்," என ஜயராமன் அவசரப்படுத்தினன். ஹோட்டல் முதலாளி கணக்கிட்டுத் தனக்கு வரவேண்டிய பணம் இவ்வளவென்று தெரிவித்தான். ஜயராமன் ரூபாயை எண்ணிக்கொடுத்துவிட்டு பயணமானன். "மோட்டார் வேண்டாமா?" என்று சேவகன் எதிரேவந்தான். "வேண்டாம். ரயிலடிக்கு நடந்தே போவேன்," என ஜயராமன் மறுத்துவிட்டு ஒருபையனிடம் பெட்டியைக் கொடுத்து வழிநடக்கலானன். ஹோட்டல் முதலாளியும் சேவகனும் இது விந்தையினும் விந்தையென ஆச்சரியம் கொண்டார்கள்.

ரயிலடியில் பையன், "முதல் வகுப்புத் தானே! பணம் கொடுங்கள் வாங்கி வருகிறேன்," என்றன்.

"இல்லை மூன்றும் வகுப்பு."

"மூன்றும் வகுப்பா?" என்று பையன் திடுக்கிட்டான்.

"ஆம். நான்காம் வகுப்பிருந்தால் அதையே வாங்கு"

"இந்த அழகிய உடையுடன் மூன்றும் வகுப்பில் பிரயாணம் செய்தால் எல்லோரும் பரிகாசம் செய்வார்களே," எனப்பையன் எடுத்துக்கூறினன்.

"நான் இந்த உடைகளை விற்றுவிடுவேன்," என்று ஜயராமன் பதிலுரைத்தான். பையன் பேசாமல் மூன்றும் வகுப்பு டிக்கட் வாங்கி வந்தான். ஜயராமன் ரயில் ஏறினன். தனக்குக் கிடைக்கவேண்டிய கூலியைப்பெற்றுக் கொண்டு பையன் ஹோட்டலுக்குத் திரும்பினன். 'இவன் பைத்தியக்காரன் என்பதில் சந்தேகமில்லை. ஆனல் பல விஷயங்களில் இவன் தெளிவாகவே இருக்கிருன்,' என எண்ணமிட்டுக் கொண்டே அவன் நடந்து சென்ருன்.

ரயில் புறப்பட்டதும், ஜயராமன் தன் உடையை மாற்றினன். 'முதல்வகுப்புக்கு வாங்காமல் மூன்றும் வகுப்புக்கு டிக்கட் வாங்கியதால் மிஞ்சிய பணத்தைக்கொண்டு கொஞ்சநாள் மனைவி மக்களைக் காப்பாற்ற முடியும். எனக்கு ஏதாவது வேலைகிடைக்கும் வரையில் அதைக்கொண்டு காலந்தள்ளலாம். மோட்டார் வாடகை வேறு மீதம் செய்திருக்கிறேன்,' என்று பலவாறு அவன் நினைத்துக்கொண்டான். கையிலிருந்த பணத்தை எடுத்து எண்ணிப் பார்த்தான். ரூபாயைப் பார்த்ததும் லோபியைப்போல முகமலர்ச்சி எய்தினன். சட்டைப்பையில் கைவிட்டுப் பார்க்க, அங்கே ஒருரூபாய் கிடைத்தது. "இதோ, இன்னெரு ரூபாய்," என ஜயராமன் எழுந்து கூத்தாடினன். வண்டியிலிருந்தவர்கள், "ஆசாமிக்குக் கொஞ்சம் மூளைக்கோளாறுபோல் இருக்கிறது," என்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டார்கள்.

ஊர்போய்ச்சேர்ந்ததும் ஜயராமன் ரயிலடியிலிருந்து வீட்டுக்கு ஓடினன். பெட்டி எடுத்துக்கொண்டு சென்ற கூலியும் அவனுடன் நடக்கமுடியாமல் தத்தளித்தான்.

கதவுமூடியிருந்தது. "ராதா!" என்று கதவைத் தட்டினன். உடனே அவன் மனைவி வந்து திறந்தாள். குழந்தைகளெல்லாம் தகப்பனை வரவேற்க ஆனந்தத்துடன் ஓடிவந்தான். தந்தையின் மடிமீதேற விரைந்து வந்த ஐந்துவயதுக் குழந்தை ராதை தள்ளாடி விழுந்தாள். பசியினுல் அவள் துரும்பென இளைத்திருந்தாள். ஜயராமன் குழந்தையை வாரிஎடுத்து ஆவலுடன் கன்னங்களில் முத்தமிட்டான். ரோஜா மலரையொத்த அவள் கன்னங்களும், அந்தோ, வாடிவதங்கி யிருந்தன. ஜயராமனுடைய விழியிலிருந்து நீர் அருவியாகப் பொழிந்தது. மனைவியும் அழுதாள்.

"மகாராஜாவின் விருந்து எப்படியிருந்தது?" என்று அவள் கேட்டாள்.

ஜயராமன் உறுதியுடன் பேசினன். "நான் அதைத்தீண்டவேயில்லை. இனி ஒருபோதும் அதை என் மனம் நாடாதிருக்க ஆண்டவன் அருள்புரிவானுக! கண்ணே, என் மனத்தைப் பீடித்திருந்த மயக்கம் அழிந்துவிட்டது. இதோபணம் போய் வேண்டிய பொருள்களை வாங்கி வா. என்றும்உண்டிராத நல்விருந்தை இன்று உண்டு களிகொள்வோம். மகாராஜாவின் விருந்தின்மேல் மோகங்கொண்டு நானடைந்த களங்கத்தை, இன்று நாம் உண்ணும் தெய்வ விருந்து துடைத்து விடுமாக. நான் மீண்டும் வேலைக்குப் போவேன். என்தலைக்கு ஏறியிருந்த பித்தம் தெளிந்துவிட்டது. கையார வேலைசெய்து என் கண்மணிகளைக் காப்பாற்றுவேன். மகாராஜாவின் விருந்து என் நெஞ்சின் ஆழத்தில் பழங்கனவாய் மறைந்து போயிற்று. எழுந்திரு."

மனைவி எழுந்தாள். ஆர்வம் பொங்க அவனையே சற்றுநேரம்பார்த்துக் கொண்டிருந்தாள். குழந்தைகள் பெற்றோரை மாறிப் பார்த்து உவகைபூத்தன. சின்ன ராதைக்கும் போன பலம் மீண்டும் வந்துவிட்டது.

# தபால்காரன்

## கே. வேங்கடாசலம்.

**“செண்பகவடிவம்மாள் வீடு இதுதானா?” என்று கேட்டுக்கொண்டே திண்ணையில் உட்கார்ந்தான். ‘ஆம்’ என்று பதில் வந்தது. தபாலையும், இருபத்தைந்து ரூபாயையும் எடுத்து அவளிடம் நீட்டினான். குனிந்துகொண்டே அவள் அந்த மெல்லியலாள், வாங்கிக்கொண்டாள். அப்பொழுது அவள் முகத்தைக் கவனித்தான் கண்களில் நீர் துளும்பிக்கொண்டிருந்தது......அவனையும் அவளையும் பற்றிய கதை இது.**

ஸ்ரீ வைகுண்டத்திலிருந்து ஏழுமைல் தொலைவில் இருக்கிறது கள்ளபிரான் கோவில் என்ற கிராமம். நவநாகரிகம் உச்சஸ்திதியை அடைந்துள்ள இந்தக் காலத்திலும் அதன் சாயைகூட விழாத கிராமம். ரயிலும் பஸ்ஸும் அதற்கு ஏழாவது மைலோடு நிற்கவேண்டியது தான். கட்டைவண்டிப் பிரயாணம், கரடு முரடான பாதை, சொல்லிவைத்தாற்போல மூலைக்கு ஒன்றாக பதினேழு வீடுகள்—எல்லாமாகச்சேர்ந்து நம் மனத்தில் அந்தக்கிராமத்தைப்பற்றி ஒரு பெருந்திகிலையுண்டுபண்ணிவிடும். ஆனால் இயற்கைக் காட்சிகளை அங்கே காணலாம். அதன் சுய பொலிவிலே தாமிரவருணி துள்ளிக்குதித்துக் கொண்டு ஓடுகிறாள். எங்கு நோக்கினும் பசுமை; எல்லாம் வயல்வெளிகள்; இவற்றைவிட படித்துறையைச் சார்ந்துள்ள பெருமாள் கோவிலும், அதன் நந்தவனமும் ரொம்ப அழகான காட்சிகள்.

கிராமத்தில் நிகழும் விசித்திரங்களில் முதன்மையானது அந்த ஊருக்குத் தபால்காரன் வருவதுதான். வாரத்தில் இருமுறை திங்கள், வியாழன் கிழமைகளில் தபால்காரன் வரவேண்டும். ஆனால் அவன் அடிக்கடி வருவது கிடையாது. காரணம் கடிதம் ஒன்றும் இராது. ஏதாவது மாதத்தில் ஒன்று அல்லது இரண்டுதடவை விஜயம் செய்வான். ‘க்ரிங் க்ரிங்’ என்ற மணியோசை காதில் விழுந்ததும் கிராமத்துச் சிறுவர் சிறுமிகள் வெளியே ஓடிவந்து அவனைச் சூழ்ந்துகொள்வார்கள். அவனுடைய சைக்கிளைப்பார்ப்பதில் அத்தனை மோகம்! அந்த ஊருக்கு அநேகமாக ஒரே கடிதம் தான் வந்திருக்கும்.

ராமசுவாமி முதலியாரின் குடும்பம் ஒரு காலத்தில் செயலுடன் இருந்தது. அந்தக் கிராமத்திற்கே அவருடைய வீடு அழகு செய்வதாக இருந்தது. நான்கு கோட்டை விரைப்பாடு, ஐந்தாறு பசுக்கள், உழவுமாடுகள் வேறு. எப்பொழுதும் பண்ணை ஆட்களும், வேலைக்காரர்களும் வீட்டைக் ‘கலகல’ ப்புடன் விளங்கச்செய்தனர். ஆனால் பாவம், செல்வம் ஒரு இடத்தில் நிலைத்துநிற்க மாட்டேன் என்கிறதே! முதலியாரின் குடும்பம் ஆட ஆரம்பித்தது. அவரிடம் கடன்வாங்கியவர்கள் எப்பமிட்டுவிட்டனர். அதோடு விளைச்சலுமில்லை. முதலியாருக்கு ஏக்கமே வியாதியாகி இறுதியில் இப்பூவுலகைவிட்டுச் சென்றார்.

முதலியாருக்குப்பின் அவர் குடும்பத்தில் மூன்றுபேர் இருந்தனர். அவருடைய வியோகிக மனைவி, புதல்வன், புதல்வி. குடும்பம் மிகச் சிறுசுதான். ஆனால் வருவாய் இல்லாமல் எப்படி நடக்கும்? மேலும் மகள் பால்யவிதவை; மணப்பருவம் அடைந்தபோது முற்றுந் துறந்த நிலையிலிருக்கவேண்டிய துர்பாக்யவதியானாள். அவளுக்கு இளையவன் தலையில்தான் குடும்பத்தின் பொறுப்பு விழுந்தது. அவனுக்கு அப்போது வயது பதினைந்துதான். இருந்தபோதிலும் எப்படியாவது நாலுதுட்டு சம்பாதிக்க வேண்டுமே, அக்கம் பக்கத்தில் வேலை தேடினான்; அகப்படவில்லை. கொஞ்சம்

தெரிந்திருந்த ஆங்கிலப்படிப்பும் சில வியாபாரிகளுக்குக் குற்றமாகப்பட்டது. சிலநாள்கழித்து கொழும்பில் உள்ள செட்டியார் கடை ஒன்றில் குமாஸ்தாவாக வேலைக்குப்போனான். அவனைப் பிரியும்போது பட்ட துன்பம் சொல்லி முடியாது.

துன்பங்கள் தனித்து வருவதில்லை; அவை கூட்டம் கூட்டமாகவே வருகின்றன. தாயும் மகளும் குடித்தனம் நடத்துவது கடவுளுக்குச் சம்மதமில்லை போலும்! மார்கழி மாதம் வைகுண்ட ஏகாதசி நாளில் தாய் பரகதி யடைந்தாள். புதல்வியின் நிலைமை மிகவும் சிக்கலாகியது. அவள் பெயர் செண்பகவடிவு. பெயருக்கேற்ப ரூபவதி. அவளுடைய கல்யாணத்தின்போது மங்கள அலங்காரத்தில் தேவகன்னி போலத்திகழ்ந்தாள். அவள் விதவையானது கடவுளின் கருணையற்ற செயல் என்றுகூடச் சொல்லலாம். தாய் மறைந்தபின் அந்த வீட்டில் ஏகாந்தமாக வசித்தாள். அதுவே அவளுக்குப்பெரும் பாரமாக யிருந்தது. தம்பியிடமிருந்து மாதம் ஒருமுறை கடிதமும் பணமும் வரும். அப்பொழுது அவள் அடையும் மகிழ்ச்சிக்கு எல்லையே கிடையாது.

* * *

அந்த வட்டாரத்திற்கு அவன் புதிய தபால்காரன். வாலிபப் பருவம்; மணமாகாதவன்; அவனுடைய கல்வித்திறனுக்கு அவன் இந்த வேலைக்குவந்திருக்க வேண்டியதில்லை. ஆனால் வேலையில்லாக் கொடுமை அவனைக் கிராமம் கிராமமாகச் சென்று தபால்களைக் கொடுக்கச் செய்தது. வெறுப்புள்ள மனத்திற்கு கிராமத்து இயற்கைக் காட்சிகள் சாந்தியூட்டும். அன்று கள்ளபிரான்கோவிலுக்கு ஒரு தபாலும் மணியார்டரும் இருந்தன. அந்தக் கிராமத்திற்குப் போவது அவனுக்கு அதுதான் முதல் தடவை.

'க்ரிங் க்ரிங்' என்ற மணியோசை. வெளியே வந்து எட்டிப்பார்த்தாள். தபால்காரன் வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்தான். "செண்பகவடிவம்மாள் வீடு இதுதானா" என்று கேட்டுக் கொண்டே திண்ணையிலுட்கார்ந்தான். "ஆம்" என்று பதில் வந்தது. தபாலையும் இருபத்தைந்து ரூபாயையும் எடுத்து அவள் முன்னால் வைத்தான். குனிந்து கொண்டே அதை அவள் எடுக்கும் போது தபால்காரன் அவள் முகத்தைக் கவனித்தான். கண்களில் நீர் நிரம்பி யிருந்தது. நடுங்கும் கைகளினால் பணத்தை எடுத்துக்கொண்டாள். அந்தக் காட்சி அவன் மனத்தை என்னமோ பண்ணுவது போலிருந்தது.

சுந்தரம்—அதுதான் தபால்காரனின் பெயர்—ஸ்ரீ வைகுண்டத்தை நோக்கிச் சென்றுகொண்டிருந்தான். பள்ளமும் மேடுமாயிருந்த பாதையில் தவளையைப் போல் 'தத்தித் தத்திச்' சென்றது சைக்கிள். அவன் மனக்கண் முன் செண்பகவடிவு வந்து நின்றாள். வஸந்தத்தின் தளிர்களைப்போல் அவள் மேனி 'தள தள' வென்றிருந்தது. முகத்தில் தான் எத்தனை பிரகாசம்! ஆனால் அந்த வெள்ளையுடை எங்கிருந்துதான் அவளுக்குவந்ததோ? அகன்ற நெற்றியில் ஒரு திலகம் மட்டுமிருந்தால் எவ்வளவு அழகாகஇருக்கும்? சமூகம் தன்னுடைய பைசாசச் சட்டங்களினால் அவளுடைய இளமைக்கு விலங்கு போட்டுவிட்டது அந்தோ!

2

செண்பகவடிவுக்குக் கணவனின் முகங்கூட மறந்துபோயிற்று. தாம்பத்யம் என்ன என்பதைச் சரியாக அவள் அறியாத காலத்தில் கணவன் ஏதோ எஜமானன் போலக் காணப்பட்டார். திடீரென்று நிமோனியா ஜுரத்தால் பீடிக்கப்பட்டு அவர் மரணத்துடன் போராடிக்கொண்டிருக்கையில் கூட செண்பகம் ஒன்றுமறியாதவளாக யிருந்தாள். அவர் காலஞ்சென்றதும் பெற்றோர்கள் தன்னைக் குறித்து வருந்தியது அவளுக்கு ஆச்சர்யமாக யிருந்தது. காலம் செல்லச் செல்ல

அவளும் தன் கைம்மை நிலையை உணர்ந்தாள். அவளுக்கு வஸந்தருது நாள்கடந்த ஒன்றாக அமைந்தது; அவளால் அதை அநுபவிக்கமுடியவில்லை.

என்றுமில்லாத ஒரு மனவெழுச்சி அன்று அவளுக்கு உண்டாயிற்று. காரணமில்லாததுதான். அவள் அகக் கண்ணில் புதிய தபால்காரனின் உருவம் அடிக்கடி தோன்றியது. பணத்தை அவன் கையிலிருந்து வாங்கியபொழுது பட்ட அவனது கரஸ்பரிசம் அவளுக்கு விவரிக்கமுடியாத உணர்ச்சியை யூட்டியது. முன்பின் பார்த்தறியாத யுவன்! இருந்தாலும் அவள் மனத்தில் அசட்டுத் தனமான அன்பு எங்கிருந்தோ முளைத்தது. அவளுடைய நினைப்பெல்லாம் எப்பொழுது மீண்டும் தபால்காரன் வருவான் என்பதிலேயே லயித்திருந்தது.

தபால்காரன் வந்தான். அவளுக்கு ஒரு கடிதம் இருந்தது. கடிதத்தைக் கொடுத்துவிட்டுக் கொஞ்சம் தயங்கி நின்றான். அவனாகவே பேச்சுக் கொடுத்தான்:

“ஒரே வெய்யல்; இந்தக் கிராமத்துக்கு லெட்டர் இது ஒன்றுதான்” என்றான்.

“ஆமாம்; ரொம்ப தூரம் அலைச்சல்” என்று செண்பகம் பதில் சொன்னாள்.

அன்று அவ்வீட்டுத் திண்ணையில் சற்றுநேரம் இளைப்பாறிவிட்டுப் பிறகு சென்றான்.

அதற்குப்பின் அடிக்கடி வருவான்; கடிதம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் வரும்போதெல்லாம் அவளுடன் பேச்சுக்கொடாமல்போகமாட்டான். செண்பகத்தின் இனியபேச்சு, நடை, சகஜமாகப்பழகுதல் இவையெல்லாம் சுந்தரத்தின் மனத்தில் அவனது நினைப்பிற்குப் பக்கபலமாக இருந்தன.

மாலைநேரம். வயல் வெளிகளிலிருந்து குடியானவர்கள் வீடுதிரும்பிக்கொண்டிருந்தனர். பக்ஷி ஜாலங்கள் தத்தம் கூட்டைநாடிப் பறந்தன. இந்தசமயத்தில் சுந்தரம் வீட்டைவிட்டுக்கிளம்பி சைக்கிளில் கள்ளபிரான்கோவிலை நோக்கிச் சென்றான். அவன் உடை புதுவிதமாக அணிந்திருந்தான். வாலிபத்தின் முறுக்குப் பிரதிபலித்தது. செண்பகத்தின் வீட்டுமுன்பு சைக்கிளை விட்டிறங்கினான். அப்பொழுது அவன் உடல் வியர்வையால் நனைந்திருந்தது.

கதவு சாத்தப்பட்டிருந்தது. நடுங்கும் கைகளினால் தட்டினான். அவள் வந்து திறந்தாள். சுந்தரத்தைக் கண்டதும் அவள் முகம் மாறுதலுற்றது. சுந்தரம் சமாளித்துக்கொண்டு பேசினான்.

“இல்லை—ஒருஇடத்துக்குப் போக வேண்டியிருந்தது, போகிறபோக்கில்....” என்று இழுத்தான்.

செண்பகம் வித்தியாசமாக ஒன்றும் நினைக்கவில்லை. அவனுக்கு ஒரு மணை எடுத்துப்போட்டாள். உள்ளே சென்று ஒரு தட்டில் கொஞ்சம் சீடையும், டம்ளரில் ஜலமும் கொண்டுவந்து அவன் முன் வைத்தாள். சுந்தரம் இதையெல்லாம் கவனியாதவன்போல் வெளியே நோக்கிக்கொண்டிருந்தான். அவர்களிடையே நீண்ட மௌனம் நிலவியது.

“செண்பகம், உன்னை ஒன்றுகேட்கலாமா?” சுந்தரத்தின் குரல் தழதழத்தது. நெடுநாளாக யோசித்திருந்த பெரிய பிசகைச் செய்துவிட்டான்.

செண்பகத்திற்கு அவன் பெயர் சொல்லிக்கூப்பிட்டது ‘சுருக்’ கென்று தைத்தது. அவனுடைய வார்த்தைகள் தபஸ்வியின் தவத்தைக் குலைக்கும் கூரிய அம்புகள் போலிருந்தன.

“என்ன, தம்பியாபிள்ளைக்கு என்ன சந்தேகம்.” என்று செண்பகம் கேட்டாள்.

சுந்தரத்தின் நெஞ்சு திக் திக்கென்று வேகமாக அடித்தது.

"உன் கைம்மை என் மனத்தை உருக்குகிறது—இவ்வளவு பால்யத்தில் நீ எப்படித்தான் சகித்துக்கொண்டிருக்கிருயோ—அதற்கு முடிவு...."

செண்பகத்திற்குத் திடீரென்று ஆவேசமும் ஆத்திரமும்வந்தன. சுந்தரம் இப்படி பேசுவானென்று அவள் கனவில்கூட நினைக்கவில்லை.

"தம்பி, உன் மனம் இப்படிப் பேச எப்படித்தான் துணிந்தது? என்னுடைய அன்பை நீ தப்பாக நினைத்துக்கொள்வாயென்று தெரியாது."

அவளுடைய 'கணீ'ரென்ற குரல் அவனை ஆயிரம் வேல்கொண்டு குத்துவதுபோல்இருந்தது. குனிந்த தலை நிமிரவேயில்லை. மீண்டும் அவள் சொன்னுள்.

"தம்பி, உன்னை முன்பின் அறியாதவள்நான். என்னைவிட்டு நாலு வருஷங்களாகப் பிரிந்து கடல்தாண்டி வசிக்கும் என் தம்பியின் முகஜாடையை உன் முகத்திலே கண்டேன். அதனுல்தான் என் மனசு என்னையுமறியாமல் பாசத்தால் கட்டுண்டது............"

அவள் பேசிய பேச்சு பெரிய ஞானியின் பேச்சாக இருந்தது. சிறிது சிறிதாக அஞ்ஞானத்திரை விலகிற்று. அவன் ஏதோ பேச விரும்பினுன்; நாவெழவில்லை. மௌனமாக நரக வேதனையநுபவித்தான்.

அவன் வாயிலிருந்து சிதைந்த வார்த்தைகள் வெளிவந்தன. மிகவும் சிரமத்துடன் சொன்னுன், இருதயத்தின் ஒலியெல்லாம் ஒன்றுகூட்டி:

"அ-க்-கா, என்னை மன்னித்துவிடு."

# ஜவஹர்லால்

## டாக்டர். பட்டாபி சீதாராமய்யா

ஜவஹர்லால் பலவிதங்களில் அலாதியான பெருமை உடையவர். ஏனெனில் தகப்பனரைப்போலவே (அதுவும் அவர் ஜீவதசையிலேயே) கியாதியை அடையும் பிள்ளைகள் சிலரே. காங்கிரஸ் மகா சபையின் தலைமைப்பதவிக்குத் தம் தகப்பனரின் உரிய வார்சு என்ற பெருமையையும் அவர் அடைந்தார். இங்கிலாந்தில் கல்விகற்றதின் பலனாக அவருக்கு மேல்நாட்டு முறையில் ஒரு பரந்தநோக்கமும், தம்மைப்போலவே மேல்நாட்டில் கல்வியின்றவர்களிடம் பக்ஷபாதமும் ஏற்பட்டன. அவர் ஸகாக்களைத் தேர்ந்தெடுப்பதிலும் இவ்விடத்தியோரை நடத்தும் விதத்திலும் இந்த பக்ஷபாதம் வெளியாகிறது.

அவருடைய வெற்றிக்குக் காரணமாயிருப்பவை அவருடைய சுறுசுறுப்பான பழக்கவழக்கங்களும், எந்தக் காரியத்தையும் பூர்ணமாகச் செய்வதில் அவருக்குள்ள அவாவுமே. அவருடைய மனப்பூர்த்தியான நோக்கங்களும், எப்பொழுதும் தியாகம்செய்யத் தயாராக இருப்பதுமே அவர் பலராலும் விரும்பப்படுவதின் ரகசியம். சிறிதே அறிமுகமுள்ளவர்களிடத்தில் அவர் அதிகமாகச் சம்பாஷிப்பதில்லை. நண்பர்களுடன் கலகலப்பாக நெருங்கிப் பழகுகிறர். அந்நியரிடத்தில் மரியாதையுடனிருக்கிறர். ஸகபாடிகளிடத்தில் அவர் முரட்டுத்தனமாக நடந்து கொள்ளக்கூடும். எந்த விஷயத்திலும் சீக்கிரமாக முடிவுக்கு வந்துவிடுவார். அபிப்பிராயங்களை லேசில் மாற்றிக்கொள்ள மாட்டார். தமது அபாரமான ஸாமர்த்தியங்களை அவர் நன்கு அறிவார். காந்திஜீக்குக்கூட தாழ்ந்தவர் என நினைக்கமாட்டார். சிலகாலமாக காந்திஜீயால் தயாரிக்கப்பட்ட தீர்மானங்களை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை என்றும் காங்கிரஸின் தீர்மானங்கள்எல்லாம் ஜவஹர்லால்நேருவால் தயாரிக்கப்பட்டவை என்றும் தெரிகிறது.

ஜவஹர் வாதங்களை இடிமுழக்கம் போல் ஆரம்பிக்கிறர்—தம்மைச் சுற்றியுள்ளோர்பேரில் வசை மொழிகளைப் பொழிகிறர், தேசமக்களின் மனப்பான்மையை நிந்திக்கிறர், ரஷ்யாவையும், ஸ்பெயினையும், சைனவையும் பற்றி பேசுகிறர். காந்திஜீயின் ஆத்மஸ்துதியை தாக்குகிறர். இடுப்பளவு ஜலத்தில், தான் கெட்டியாக பிடித்துக்கொண்டிருக்கும் பிராணி வாயிலிருந்து தப்பச் சிறிது முயற்சிக்கும் காலத்தில் ஒரு முதலையானது உண்டாகுவதுபோன்ற குழப்பத்தை உண்டாக்குகிறர். சேறும் மண்ணும் வாரி இறைக்கப்படுகிறது. அலைகளும் நீர்க்குமிழிகளும் உண்டாகின்றன. தண்ணீரை அடித்து வாரி இறைப்பதுபோலிருக்கிறது. சிறிது நேரத்தில் அவர் சாந்தமாகிறர். ஒரு முக்கியமான விஷயத்தைக் குறித்துத் தீவிரமாகத்தாக்கிப்பேசுகிறர். இவ்வாறு இந்த நேரம் செல்கிறது. இரவுமுழுவதும் மூளைக்கு வேலைகொடுக்கிறர். பொழுதுவிடியுமுன் நேர்த்தியான, தற்காலத்திலுள்ள கஷ்டங்களையும் அவைகளினல் வரக்கூடிய ஆபத்துகளையும் விளக்கும் ஒரு குறிப்புத் தயாராகிவிடுகிறது.

யுத்த எதிர்ப்பைப்பற்றி ஜவஹருக்கு என்ன அபிப்பிராயம் இருந்தது என்று நமக்குத்தெரியவில்லை. யுத்தமுயற்சிக்கு இடைஞ்சல் இல்லாத தனிப்பட்ட நபர் சத்தியாக்கிரஹமா? அல்லது சமாதானக் கொள்கையா? முழு அஹிம்சையா அல்லது பொதுஜன சத்தியாக்கிரஹமா? வேறு ஏதாவதா? ஆனல் முக்கியமான சந்தர்ப்பங்களில் அவர் காந்திஜீ காட்டிய வழியைப் பின்பற்று

வதில் திருப்தி அடைந்திருக்கிறார். ஸர் ஸ்டாபோர்ட் கிரிப்ஸ் விஜயத்தின் பொழுதுதான் அவர் இஷ்டம்போல் நடக்க ஆரம்பித்தார். 1942 ஜனவரியில் காங்கிரஸ் காரியக்கமிட்டிக் கூட்டத்துக்கு அவர் வார்தாவுக்கு அழைக்கப் பட்டார். அந்தக்கூட்டம் நடத்த வார்தா தகுந்த இடமில்லை என்று அப்பொழுது அவர் எண்ணினார். மிகவும் குறுகிய நோக்கமுள்ள ஐந்தாறு சிஷ்யர் களுடன் இந்த காந்தி என்னும் வேதாந்தி; பதுங்கிக்கொண்டு தூங்கிவழியும் பொந்து என்று வார்தாவைஎண்ணினார். அவர் காந்தியை விட முன்நோக்கிச் செல்பவராயினும் அவருடைய கண்காணிப்பையும் வழி காட்டுதலையும்விட்டு விலக இஷ்டப்பட வில்லை. அவருக்குக் கீழ்படிந்தே நடந்து வந்தார்.

கிரிப்ஸ் வந்தவுடன் வழக்கமான கீழ்ப்படிதலை விட்டு விலகினார். இந்திய சுயேச்சைக் கோரிக்கையை முன்னணியில் வைத்திருந்தது பண்டிட் ஜவஹர் லால்தான். லக்ஷ்மணபுரி ஸர்வகட்சிமகா நாட்டில் சுயேச்சைப் பிரமாணத்தைத் தயாரித்து, சுயேச்சைக்கட்சியையும ஏற் படுத்தியது அவர்தான். அக்கூட்டத் திலேயே தம் தகப்பனாருடைய கொள்கைகளை எதிர்த்தும் பேசினார். நாளதுவரையில் அதே கொள்கையை அவர் கடைப்பிடித்து வந்திருக்கிறார். ஆனால் கிரிப்ஸ் வந்ததும் ஒரு விசித்திர மான மாறுதலைக் காண்கிறோம். கிரிப்ஸ் திட்டத்தின் பூர்வபீடிகையிலுள்ள இந்தியாவின் அந்தஸ்துபற்றிய யோசனை களுக்கு அவர் இணங்கியிருக்கிறார். பாதுகாப்பு இலாகாவுக்கு ஒரு இந்திய மெம்பர் நியமிக்கப்பட்டிருந்தால் காங் கிரஸ் சமாதானத்துக்கு வந்திருக்கும் என்பது நாம் அறிந்த விஷயம். சில மாகாணங்களுக்குத் தனித்திருக்கும் உரிமைகளைப்பற்றியும், சமஸ்தானங்களைப் பற்றியும் உள்ள கோட்பாடுகளுக்கு பல திருத்தங்கள் கொண்டுவரப்பட்ட போதிலும், டொமினியன் அந்தஸ்து பற்றின யோசனைகளை காங்கிரஸ் நிரா கரிக்கவில்லை. ஆனால் காந்திஜீயோ 1940 ஜூன் முதல் (பிரஞ்சுவீழ்ச்சி) பூர்ண சுயராஜ்யத்தையே தமது லக்ஷியமாக கொண்டிருக்கிறார்.

வேறு அரசாங்கங்கள் இந்தியாவில் தலையிடுவதை காந்திஜீ கொஞ்சமும் விரும்பவில்லை. ஜவஹர்லால் சுயேச்சை யான இந்தியாவுக்கும், ஸ்பெயின், சைனு ரஷ்யா, அமெரிக்கா முதலிய தேசங் களுக்கும் நெருங்கிய அரசியல் உறவு இருக்கவேண்டுமென்று சொல்லுகிறார்.

ஜவஹர்லால் தாம் செய்த பிசகுகளைக் குறித்து மனப்பூர்த்தியாகப் பச்சாத் தாபப்படுகிறார்; அவர்செய்யும் பரிகாரங் களும் திருப்திகரமாயும் அந்தரங்க சுத்தி யாயும் இருக்கும். ஆனால் அதே பிசகை மறுபடியும் செய்யமாட்டார் என்று நாம் நிச்சயமாகக் கூறுவதற்கில்லை. எனினும் தம் குறைபாடுகளை அவர் நன்கு அறிந்திருப்பதால், ஒருகாலத்தில் அவர் புதுமனிதராக ஆவார் என்று நாம் நிச்சயமாக நம்பலாம்.

அவர் ஒரு அரசியல்வாதி—வேதாந்தியு மல்ல ஞானியுமல்ல. உலக இன்பங்களை ரஸிக்கிறார்—ஆனால் ஒருபொழுதும் சொந்த சுகத்தைநாடி கடமையைக் கைவிடார்—சுயநலத்தைப் பாராட்டி தேசநன்மையைப் பின்தள்ளமாட்டார். கடினமான வாழ்க்கை நடத்தும் பழக் கத்தைப் பெற்றிருக்கிறார்—மூன்றாவது வகுப்பு வண்டியில் பிரயாணம் செய் வார். வெறும் தரையில் தூங்குவார்—மைல்கணக்காக நடப்பார்—எளிய ஆகாரத்தை உண்பார். தேக அமைப்பா லும், நம்பிக்கையாலும், தத்வஞானத் திலும் காந்திஜீக்கும் அவருக்கும் மலைக் கும் மடுவுக்கும்போலதான். ஆனால் இரு பத்தோராண்டுகள் அவர்கள் ஒன்றாக உழைத்திருக்கிறார்கள். அவர்களிடையே எவ்வளவு அபிப்பிராயபேதங்களிருந்தா லும் அவைகளிலும் சிறிது ஒற்றுமை யையும், அவர்களின்ஒற்றுமையில் சிறிது அபிப்ராயபேதத்தையும் காணலாம்.

அவர்கள் ஒருவருடன் ஒருவர் நடந்து கொள்ளுவதிலும்—இருவரும் வெளியுலகில் நடந்துகொள்ளும் விஷயத்திலும் அவர்கள் கடைப்பிடிக்கும் நிதானமும் ஜாக்கிரதையும் இதைச் சாத்தியமாகச் செய்கின்றன. காந்திஜீ ஒருவேதாந்தி. தீர்க்கதரிசி. ஜவஹர் ஒரு அரசியல்வாதி. உலகத்தில் ஈடுபட்ட மனிதர்; இருந்த போதிலும் ஜவஹர்லால் என்னும் ஆயுதத்தைத் தாண்டிவிடும் சக்தியாக காந்திஜீ இருக்கிறார். அவர்களிடமுள்ள வேறுபாடுகள் நெருப்புக்கும்—ஜலத்துக்குமுள்ளதுபோல இருந்தாலும் உண்மையான ஒற்றுமையுமிருக்கிறது. ஜவஹர் துண்டாக்குவதை காந்திஜீ ஒன்றுசேர்க்கிறார். ஜவஹர் உயரப் பறந்தால் காந்திஜீ அடிப்பரப்பை விஸ்தாரப்படுத்திக் கீழேவிழாமல் செய்கிறார். ஜவஹர் நதியின் வேகம்—காந்திஜீயோ ஜலத்தின் அளவு. காந்திஜீயும் ஜவஹரும் கங்கையும் யமுனையும் போலக் கலக்கிறார்கள். அஹிம்சையான களங்கமற்ற கங்கா ஜலமும், கோபம், தாபம் ஆத்திரம் இவைகளால் கலங்கிய யமுனையும் கலக்கின்றன. சிறிது தூரம்வரைதான் ஒன்றிலிருந்து மற்றொன்று விலகிச் செல்லுகிறது. சீக்கிரத்தில் ஒன்றாகக் கலக்கின்றன. அகலமும் ஆழமும், தத்வமும் விக்ஞானமும்,—ஆத்மீய வாதமும் லௌகிகமும்—ஹிம்சையும் அஹிம்சையும் ஒன்றுபடுகின்றன.

---

[ஜவஹரைப்பற்றிய ஓர் நூலுக்கு எழுதப்பெற்ற முன்னுரை இது. இதைத் தமிழ்ப்படுத்தியவர் ஸ்ரீ. தி. சக்ரபாணி பி. ஏ.,]

# அரசியல் புராணம்

கே. எஸ். என். சர்மா

"பொருள் புலப்படாத பிரசித்தமான ஸ்மிருதியைப்போல இருந்தாள் ஸீதை அசோகவனத்தில்" என்று சொன்னார் வால்மீகி. அதாவது, மனோ பாவங்களுக்கு ஏற்றவாறு அர்த்தம் தொனிக்கும்படி மகான்கள் பேசுவார்கள் என்பது வால்மீகியே ஒப்புக்கொண்ட கருத்து. உண்மையை மறைக்கவேண்டுமென்பதல்ல அவர்களுடைய நோக்கம். யார் மனத்தையும் புண்படுத்தக்கூடாது என்பதுதான் அவர்கள் மிகவும் கூடமாகச்சொல்லுவதற்குக் காரணம். பஞ்சதந்திரங்களின் போக்கே அலாதியல்லவா? அரசியலைப்பற்றிக் கேட்டால் மிகவும் தந்திரமாக, ஒரு பஞ்சதந்திரக்கதையைச் சொல்லி "நீயே ஊகித்துக்கொள்!" என்று சொல்லிவிட்டார்கள் ஸ்ரீ மகாமகோபாத்தியாய சாஸ்திரிகளவர்கள்.

தஞ்சைஜில்லா முழுவதும், என், பக்கத்து ஜில்லாக்களிலும் காவேரிப்பட்டினம் மஹாமஹோபாத்தியாய குமாரஸ்வாமி சாஸ்திரிகளவர்களை அறியாதவர்கள் ஒருவரும் இருக்கமாட்டார்கள். ஆபாலவிருத்தாள் ஸ்திரீ புருஷர்கள் யாவருக்கும் அவர் பேரைச்சொன்னாலே ஒரு ஊக்கம் ஸந்தோஷம் மரியாதை இவைகள் உள்ளத்தில் உதய்மாவது வழக்கம். நல்ல ஐவேஜி உள்ளவரானாலும் எளிய வாழ்க்கையிலேயே ஈடுபட்டவர். டாம்பீகமென்பதே அவருக்குத்தெரியாது. டாம்பீகமான வாழ்க்கையில் இருப்பவர்களைக்கண்டால் வருத்தப்படுவார். நம் தேசத்தின் பொருளாதார நிலைமையில் அடிமைவாழ்க்கையில் இருந்துவரும் இந்தியர்களுக்கு டாம்பீக வாழ்வானது தேச விடுதலைக்கு ஓர் பெருத்த தடை என்பதாகவே அவருடைய அபிப்ராயம். அவ்விஷயத்தை அடிக்கடி தம்மிடம்வரும் வித்தியார்த்திகள், சர்க்கார் உத்தியோகத்திலிருப்பவர்கள், அரசியல் துறையில் ஈடுபட்டவர்கள் இவர்களிடம் சந்தர்ப்பம் நேர்ந்தபோதெல்லாம் அனுப்பன்னியில் எடுத்துரைப்பது வழக்கம்.

சாஸ்திரியாருக்கு வயது அறுபதுக்குமேலாகியும் திடமான சரீரமும் சளையாத உழைப்பும், உள்ளவர். காலையில் ஸ்நானபானாதிகளைச்செய்ய சுமார் ஒருமைல் தூரமாயிருந்தாலும் காவிரியாற்றுக்குப்போய் நித்யகர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு வீடுவந்து சிவபூஜை பாராயணம் முதலியவைகளை முடித்துக்கொண்டு போஜனம் செய்து பிறகு சில புஸ்தகங்களும் கையுமாக திண்ணையில் சாய்மானத்தில் சாய்ந்துகொண்டு சிரமபரிகாரம் செய்துகொள்வது வழக்கம். சாஸ்திரிகளவர்கள் குடும்பம் ஆதியில் தஞ்சை மஹாராஷ்ட்ர ஸம்ஸ்தானத்தில் மந்திரி ஸ்தானத்திலிருந்தவர்களின் பரம்பரை. மேற்படி வம்ச ஸந்ததியார்கள், தேவபாஷையான ஸம்ஸ்கிருத பாஷையில் விசேஷமான தேர்ச்சிபெற்றே வந்தவர்கள். அத்துடன் ராஜரீக சாஸ்திரங்களில் அந்த வம்சத்தார்களுக்கு விசேஷமான பயிற்சியும், அநுபவஞானமும், குடும்ப தனமாகவே இருந்துவந்தன. ஷிபரம்பரையில் உதித்தவரான குமாரஸ்வாமி சாஸ்திரிகளவர்களுக்கும், காமந்தகர், கௌடில்யர் முதலியோர்களின் அர்த்த சாஸ்திரங்களில் விசேஷமான ப்ரீதியும் அவற்றின் மர்மங்களைக்கண்டுகொள்வதில் ஸூக்ஷ்மபுத்தியும் இருந்துவந்தபடியால், தற்கால அரசியல்வாதிகள் பலரும் அடிக்கடிவந்து பலவித சந்தேகங்களைக் கேட்டு நிவர்த்திசெய்துகொள்வது வழக்கம். சாஸ்திரிகள்வர்கள் அதிமேதாவியானபடியால், தம்மிடம் வரும் அரசியல்வாதிகளிடம் ஒவ்வொருநாட்டின் அரசியல் முறைகளுக்கும் ஆதாரங்களை நமது இதிகாஸரத்னமான வால்மீகி ராமாயணம், விஷ்ணுசர்மாவின் பஞ்சதந்திரம் முதலிய கிரந்தங்களில்

பொலிந்துகிடக்கும் வசனங்களைக் கொண்டே எளிய முறையில் அழகாய் எடுத்துக்காட்டுவது வழக்கம்.

ஸமீபத்தில் சிலநாள் முன் சில அரசியல்வாதிகள் வந்து சாஸ்திரி களைப் பேட்டிகண்டபோது நடந்த ஸல்லாபங்களை வெளியிடுகிறேன்.

அன்று வந்த அரசியல்வாதிகளில் ஒருவர் ஸ்ரீ சாஸ்திரிகளவர்களைப்பார்த்து நமது தென்னாட்டுத்தலைவராக விளங்கி வரும் ராஜாஜி அரசியல் மேடையில் தற்காலம் உண்டாக்கிவரும் சிக்கலைப் பற்றி நம் அர்த்தசாஸ்திர ரீதியாய் ஒரு ஸமாதானம் வேண்டுமென்று கேட்டதற்கு பிரும்மஸ்ரீ சாஸ்திரிகளவர்களின் உத்தரமானது—வழக்கப்படி கூடமாய் இருந்தபடியால் அதை அப்படியே வெளியிடுகிறேன்:

नरपति हितकार्ता द्वेष्यतां याति लोके
जनपद हितकर्ता त्यज्यते पार्थिवेन्द्रैः ।
इति महति विरोधे वर्तमाने समाने
नृपतिजनपदानां दुर्लभ कार्यकर्ता ॥

பாரததேவியின் திலகமென்று எல்லோராலும் புகழப்படுகிற வர்த்தமானமென்னும் நகரத்தில் எல்லா ஜாதியாராலும், எம்மதஸ்தராலும் பரோபகாரி, நீதிமான், கொடையாளி, பரதார ஸகோதரன், சாந்தமூர்த்தி யென்றெல்லாம் புகழப்பட்ட தந்திலன் என்னும் ஓர் வணிகன் தன்னலங் கருதாது வசித்துவந்தான்.

அவனுடைய குணமும் கீர்த்தியும் அரசனின் ஆஸ்தான பர்யந்தம் எட்டியபடியால் அரசன் ஓர்தினம் தன் முக்கிய அதிகாரிகளைக்கொண்டு தந்திலனென்னும் கோடீஸ்வரனை தன்னுடைய சபைக்கு அழைத்துத் தகுந்த மரியாதைகள் செய்து தனது நண்பர்களுடன் பலவிதமான ஸல்லாபங்கள் செய்து மெத்த ஸந்தோஷமடைந்தான். தந்தில வணிகனைப்பார்த்து "நாம் உம்முடைய முக விலாஸத்தையும், சொல் நயம், வணக்கம், பெருந்தன்மை, தயாள குணம் முதலியவைகளையும், கண்டும் கேட்டும் மெத்த ஸந்தோஷமடைந்தோம். ஆதலால் இன்றுமுதல் நமது நண்பர்கள் பலரிலும் உம்மையே சிரேஷ்டமானவராய் நாம் பாவிக்கிறபடியால் நமது ராஜ்யகாரியங்களை நிர்வகிப்பதில் உமது செல்வாக்கே உயர்வாக இருக்கும். ஒவ்வொருநாளும் உமக்கு சாவகாசப்பட்டகாலங்களில் நமது அரண்மனைக்குத் தவருமல் வந்துபோக வேண்டும். நமது ராஜ்ய நிர்வாக சபைகளில் எக்காலமும் உமக்காக ஒரு ஸ்தானம் ஒதுக்கிவைக்கப்பட்டிருக்கும். உமது செல்வாக்கு இந்த ராஜ்யத்தின் வெளிக்காரியங்களிலும நமது சொந்த விஷயங்களிலும் கூட முழு அதிகாரம் பெற்றதாய் இருக்கும்." என்று பலவிதமாய் வணிகனைக் கௌரவித்து அன்று தனது பழைய நண்பர்களுடனும், மந்திரி முதலிய தக்க அதிகாரிகளுடனும் தந்திலனுக்கு ஓர் பெருத்த விருந்து நடத்திக் குதூகலமாயிருந்தான். ராஜ்யத்திலுள்ள பண்டித பாமரர்கள் யாவரும் பரோபகாரி தந்திலனை அரிய சந்தர்ப்பத்தில் கௌரவப்படுத்தினது அரசனுடைய பேரறிவையும் பிரஜாபாலன தந்திர சாமர்த்தையும் ஜனங்களிடம் அரசனுக்கு ஏற்பட்டிருக்கும் பொறுப்பையும் பிரகடனம் செய்ததாகவே ஏற்படுகிறதென்று அரசனைப் புகழ்ந்தார்கள்.

அன்றுமுதல் ராஜ்யத்தில் ஏற்படுகிற எவ்வித ஸம்பவங்களிலும் வணிகன் தந்திலன் கலக்காத சமயமே கிடையாது. எந்தக்கூட்டத்திலும் தந்திலன் வரவையும் அவனுடைய பேச்சையும் எதிர்பார்த்து ஆயிரக்கணக்கில் ஜனங்கள் காத்துக்கிடக்கும். கூட்டங்களுக்கு வந்ததும் கைகொட்டியும் ஆரவாரம் செய்தும் தங்கள் பிரியத்தைக் காட்டி வந்தார்கள். தந்திலனும் ஆங்காங்கு நியாயந்தவருது கெட்டவர்களை நல்வழிப் படுத்தியும், நல்லவர்களை உயர்பதவிக்குக் கொண்டுபோயும், தனிகர்களைப் பரோபகாரிகளாக்கியும், ஆண் பெண் ஸகலரையும் ஸகோதர ஸகோதரி பாவம்

கொண்டு நடந்துவரும்படி பழக்கியும் ஆங்காங்கு ஏழை பணக்கார வித்தியாசமின்னியில், கூட்டங்களைக்கூட்டி அந்தந்த காலக் குறைகளை மகாஜனக்கூட்டத்திலேயே தீர்க்க வசதி ஏற்படுத்தியும் அங்கேயே நன்கொடைகள் சேர்த்தும், அதிகமான தேவைக்கு அரசாங்கத்திலுள்ள சபையின் மூலமாய் அரசரின் நன்கொடையை ஜனங்களுக்கு வாங்கிக்கொடுத்துப், இரவு பகலாய் ஏழைகளின் பங்காளியாய் உழைத்து வரும் உத்தமனுக்கு அரண்மனையிலும் பூர்ணவிசுவாஸம் ஏற்பட்டு, அரசனின் அந்தப்புரம் வரைக்கும் தந்திலனுடைய மேல்விசாரணை நடந்துவரும் நாளில் ஓர்தினம், தந்திலனுடைய மாளிகையில் தந்திலனின் விவாஹ மகோத்ஸவம் நடந்தது. அது எவ்வித ஆர்ப்பாட்டத்துடன் நடந்திருக்குமென்பதை அவனுடைய பொதுவாழ்வின் செலாவணியையும் அரசாங்கத்தில் தந்திலன் வார்த்தையே கடைசி நீதியாக ஏற்பட்டு நடந்து வருவதைப் பார்த்தும் கேட்டுமிருப்பவர்களுக்கும், இக்கட்டுரையை வாசிப்பவர்களுக்கும் விரிவாய் எழுதத்தேவையில்லை. நகரஜனங்களில் ஏழை, பணக்காரர், பண்டிதர் பாமரர் உயர்ந்த ஜாதியார் கீழ்ப்பட்ட ஜாதியார், தொழிலாளி முதலாளி முதலிய எல்லோரும் ஏற்றத்தாழ்வின்றி அவனால் உபசரிக்கப்பட்டு பரமகுதூகலத்துடன் அவனை வாயார வாழ்த்தி அவரவர் வீடுசென்றார்கள்.

அரச குடும்பஸ்தர்களும் வந்து விருந்துண்டு பிறகு ஒருநாள் குறிப்பிட்டுத் தந்திலன் தம்பதிகளை அரண்மனைக்கு அழைத்து அரசன் தன்னைப்போன்ற ஓர் அரசனுக்கு நடத்துவதுபோல மந்திரி முதலிய பெரிய உத்தியோகஸ்தர்கள் நகரப்பிரமுகர்கள் முதலியவர்களுடன் பெரிய தொரு விருந்துநடத்தி அன்று பூராவும் ஸங்கீதமும் நர்த்தனமும் கதைகளுமாய் காலங்கழித்து மறுநாள் அவரவர்கள் மாளிகைக்கு சென்றார்கள்.

மேற்படி தந்திலனின் விவாக மஹோத்ஸவ நாட்களில் அரண்மனையில் மகாராஜாவின் அந்தப்புர வேலையாளன் கோரம்பன் தந்திலன் ஏதோ வீட்டில் தவறுதலாய் நடந்துகொண்டதால் பரமதயாளுவான தந்திலனுக்கே கோபம் ஏற்பட்டுக் கோரம்பனைக் கழுத்தில் கையை வைத்து வெளியில் நெட்டித் தள்ளிவிட்டான். அதுமுதல் தன் அவமானத்தை நினைத்து நினைத்து 'கோடீஸ்வரனும் ராஜ்யத்தில் உள்ள சகலர்களாலும் நன்கு மதிக்கப்பட்டவனும் நமது அரசனுக்கே பிரதிநிதியாய் இருந்துவரும் தந்திலனுக்கு நாம் என்ன தீங்கை செய்துவிடமுடியும்! நமக்கேற்பட்ட அவமானத்திற்கு எவ்விதம் அவனுக்குப் பதில்செய்து காட்டமுடியு' மென்று இரவு பகலாய் கவலையுடன் இருந்தான்.

ஓர்தினம் அதிகாலையில் கோரம்பன் அரசன் படுக்கையில் சயனித்திருக்கும்போது அந்த சயன ஸ்தலத்தைச்சுற்றி துடைப்பத்தால் சுத்தி செய்துகொண்டிருப்பவன் தூக்கக் கலக்கத்தில் வேலைசெய்வதுபோல் ஆடி ஆடிவிழுந்துகொண்டு சொல்லலுற்றான். "என்ன ஆச்சர்யம்! தந்திலருடைய ஸ்வதந்தரம் வலுத்துப்போய் ராஜமகிஷியைக்கூட கட்டிக்குலாவும்படி ஆகிவிட்டதே" என்று சொல்லிக்கொண்டே வெளியில் சென்றான். இவ்வார்த்தையை படுக்கையில் பாதி நித்திரையிலிருந்த அரசன்கேட்டு, பரபரப்புடன் எழுந்திருந்து "கோரம்பா, இங்கேவா, நீ சொன்ன விஷயம் உண்மையா?" என்று கேட்க, கோரம்பனும் "அரசே, இரவு முழுவதும் சூதாட்டத்தில் கண்விழித்ததாலேற்பட்ட தூக்கக் கலக்கத்தில் என்னவோ கனவுகள்கண்டு ஏதாவது உளறியிருப்பேன். நான் சொன்னதே எனக்கு நினைவுக்கு வரவில்லை. மன்னிக்க வேண்டும்" என்று நமஸ்கரித்து வீடு சென்றான்.

அரசன் ஏகாந்தத்தில் கோரம்பன் வார்த்தையை நன்கு ஆராய்ந்து யோசிக்கத் தொடங்கினான், "நமது அரண்மனை அந்தப்புரம் வரையில் ஸ்வா-

தீனமாய் நடமாடுபவர்கள் கோரம்பன் ஒருவன், தந்திலனென்னும் வைச்ய நண்பனொருவன்; ஆதலால் ஒரு ஸமயம் நமது அரண்மனையில் தேவியுடன் தந்திலன் ஸரஸ ஸல்லாபத்துடனிருந்ததை இவன் கண்ணால் பார்த்திருக்கக்கூடும், அதனால்தான் அதை நம்மிடம் கூறுவதுபோல் கூறி, மறைக்கப்பார்க்கிறான். இருக்கட்டும்" என்று தன் மனதை ஒருவாறு திடப்படுத்திக்கொண்டு அன்று முதல் தந்திலன் விஷயத்தில் ரொம்ப உபேக்ஷையாகவே பலரறிய நடந்துகொண்டான். அதிகம் கூறுவானேன், அரண்மனைக் காவலாளர்களால் கூட நாளடைவில் வெளியில் நிறுத்தப்பட்டான். தந்திலனென்னும் வணிகனும் நாளுக்குநாள் அரண்மனையில் ஏற்பட்டுவந்த அவமரியாதையையும் கடைசியில் அரண்மனையிலேயே பிரவேசமில்லாமல் தடுக்கப் பட்டதையும் அறிந்து மனது கலங்கினவனாய்த் தானே யோசிக்கத் தலைப்பட்டான். 'நான் என்று தினம் அரசகுடும்பத்தில் ஸம்பந்தம் வைத்துக்கொண்டேனோ அன்று முதல் இன்று வரையில் அரசனுக்கோ, அவரைச் சேர்ந்தவர்களுக்கோ, யாதொரு விதத்திலும், மனதாலும் கெடுதலை எண்ணினவனன்று. அவ்விதமிருக்க உயிருக்கு உயிராய் என்னை மதித்து வந்த அரசனுக்கு என்னிடம் வருத்தம் உண்டாக என்ன காரணம்; அரண்மனை அதிகாரிகள் யாவரும் கண்டவுடன் மரியாதை செய்து வழிவிலகி நின்றவர்கள், ஏன் என்னிடம் இவ்விதம் அலக்ஷிய புத்தியுடன் நடந்துகொள்கிறார்கள்?' என்று, பலவாறு யோசித்தும் ஒருவித முடிவுக்கும் வரமுடியாமல் இருந்துவரும் நாளில், ஓர் தினம் தந்திலன் அரண்மனை வாயில் வழியாய் வீதியில் போய்க்கொண்டிருக்கும்போது, அங்கே நின்றுகொண்டிருந்த கோரம்பன், வாயில்காப்போர்களைப் பார்த்து, "துவாரபாலர்களே அரசனின் பரிபூர்ண தயவு பெற்ற தந்திலப்பிரபுவுக்கு நிக்ரஹா நுக்ரஹசக்தியுண்டு. அவரிடம் ஏதாவது தவறுதலாய் நடந்தீர்களேயானால் எனக்குக் கிடைத்த கல்தா உங்களுக்கும் நிச்சயமாய்க் கிடைக்கும். ஜாக்கிரதையாய் நடந்துகொண்டு பிழையுங்கள்!" என்று தந்திலனைப் பார்த்துவிட்டு ஏளனமாய்ப் பேசினான்.

அந்த வார்த்தையை அவ்வழியே சென்ற தந்திலன் கேட்டுப்பல நாளாய் முடிவுக்குவராத மனக்கவலையை அன்று தன் வீடுசென்று முடிவு செய்துகொண்டான். "நமக்கேற்பட்ட கௌரவ ஹானியானது கோரம்பனால் ஏற்பட்டதுதான். நாம் அந்த அல்பனை நம் விவாகதினத்தில் செய்த அவமானத்திற்குப்பிரதியாய் இவ்விபரீதம் ஏற்பட்டது" என்று உணர்ந்தான்.

"கீழ் ஜாதியினனாலும் அரசனின் ஏகாந்த ஊழியர்களுக்கு ஒருவிதமான செல்வாக்கு இருக்கத்தான் செய்கிறது" என்ற நீதிவாக்கியத்தை உணர்ந்து அன்றிரவே கோரம்பனைத் தன் மாளிகைக்கு வரவழைத்து, தகுந்த மரியாதைசெய்து "நண்பா, அன்று நம் அரண்மனையில் நடந்த வைபவத்தில் ராஜகுருவின் எதிரில் மரியாதைக்குறைவாய் நீ இருந்ததைக்கண்டு கோபத்தால் நான் உன்னை வெளியில் தள்ளினதை மன்னிக்க வேண்டும்" என்று பலவிதமான மொழிகளால் கோரம்பனை உத்ஸாகப்படுத்தி வீட்டிற்குப்போகும்போது, தகுந்த வெகுமதிகள் செய்து அனுப்பினான்— கோரம்பனும் அல்பனாகையால், ஸன்மானங்களையும் புகழ் வார்த்தைகளையும் கேட்டு உள்ளம் பூரித்து, "இந்த உத்தம புருஷனுக்கு நாம் செய்தது தவறுதல் என்றெண்ணி மறுதினம் அதிகாலையில் படுக்கையில் அரசன் தூங்கிக்கொண்டிருந்தபோது சொல்லலானான், "ஆஹா! என்ன நமது அரசருடைய புத்தி ஹீனம், மலமோசனம் செய்துகொண்டே இலந்தப்பழம் சாப்பிடுகிறாரே" என்று சொல்லிக்கொண்டே பெருக்கிவந்தான், அரசனும் இவ்வார்த்தையைக்கேட்டு ஆச்சரியப்பட்டு

"கோரம்பா, என்னசொன்னுய்? நீகூறின பிரகாரம் நான் வாழ்நாளில் ஒருதடவை கூட நடந்ததில்லை, என்னதைரியத்தினல் சொன்னுய்! கோரம்பா, இந்நேரம் வேறொருவரானல் சிரச்சேதம் செய்திருப்பேன். உன்னை, வெகுநாள் வேலைக்காரன் என்று மன்னித்தேன்." என்றான்.

"ராஜன், மன்னிக்க வேணும். இரவில் வெகுநேரம் சூதாடும் வழக்கத்தால் தூக்கம்கெட்டு இங்கே காலையில் பெருக்கிக்கொண்டிருக்கும் போது என்னை யறியாமல் தூக்கமும் அதில் ஸ்வப்னமும் ஏற்பட்டு ஏதோ வாயில்வந்ததைப்பேத்தியிருப்பேன். மன்னிக்கவேண்டும்." என்று காலில் விழுந்தான். அவனை அனுப்பிவிட்டு அரசன் யோசிக்கலானன். 'கோரம்பனுடைய நித்திரையின் பேத்தல், நம் விஷயத்தில் எப்படிச் சுத்தப்பிசகாயிற்றோ, அதேரீதியில்தான் நமது நண்பன் தந்திலன் விஷயமாயும் பிதற்றியிருக்க வேண்டு' மென்று, ஒருதடவைக்குப் பலதடவை ஆலோசித்து, மறுதினமே தந்திலனை வரவழைத்துத் தகுந்த ஸன்மானங்கள் செய்து, தன் பிழைக்கு மன்னிப்புக் கேட்டுக்கொண்டு, அன்றுமுதல் ஸகல ராஜ்யகாரியங்களையும் கவனிக்கும்படி அவனையே நியமனம்செய்து, மனநிம்மதியுடன் இருந்தான்.

ஆதலால் நம்முடைய ராஜநீதி என்ன சொல்லுகிறது: ஜனங்களுடைய க்ஷேமத்தைக் கோருபவன் அரசனுக்கு விரோதி. அரசனுடைய க்ஷேமத்தை நாடுபவன் பிரஜைகளின் விரோதியாய்க் கருதப்படுகிறான்.

ஆகவே பிரஜைகள், அரசாங்கம் இரண்டிற்கும் நலனைத் தேடுபவனும் இருவகையினராலும் மதிக்கப்படுபவனுமான ஒரு ஊழியன் கிடைப்பது மிகவும் துர்லபம்.

* * *

சாஸ்திரிகளவர்கள் சொன்ன இந்தக் கதை 'பஞ்சதந்திர'த்திலுள்ளது.



# ஞானோதயம்

'ராமன்'

சோற்றுக்கு வழிதேடியாகவேண்டுமே, அதை உத்தேசித்துத் தண்ணீரி லிருந்து வெளிப்பட்ட மீனைப்போல, ராசாத்தி குடிசையைவிட்டுக் கிளம்பி வியாபாரம்செய்ய வந்துகொண்டிருந்தாள். அப்பொழுதெல்லாம் கிழவி, குழந் தையின் முகத்தில் அரும்பும் நாணத்தையும், ஏக்கத்தையும் பார்த்துத் துவிப் பாள். அவர்களுடைய ஸ்திதியைக் கண்டு அநுதாபப்படவோ, உதவவோ, இந்த உல்லாச உலகுக்கு நேரமேது!

**கா**லையிலிருந்து குழந்தைக்குக் கபம் கட்டிக்கொண்டுவிட்டது. மூச்சுவிடக் கூட முடியவில்லை. நீர் இறங்காமல் வயிற்று ஒப்புசம் அதிகரித்தது. பேசு வதற்குக்கூட வயசாகவில்லை. முக்கி முனகிப் படாத அவஸ்தைகள் பட்டுக் கொண்டிருந்தது. என்னையே ஏக்கத் துடன் பார்த்துக் கண்ணீர் வடித்தது குழந்தை.

கட்டி மருந்து இரண்டு வருஷங் களாகக் கொடுத்துக் கொடுத்து அலுத் போனதால், பத்து நாட்கள் மருந்தை நிறுத்திப் பார்க்கலாமென்று என் மனைவி யிடம் சொன்னேன். அவளும் என் பேச்சைக்கேட்டு மருந்து கொடுக்க வில்லை. அதன்விளைவுதானோ என்னவோ, குழந்தை உயிருக்கு மன்றாடும் நிலைமை க்கு வந்துவிட்டது இந்த ஐந்தாறு நாட் களுக்குள்.

உடலெல்லாம் மஞ்சள் பூத்திருந்தது. கண்ணன் விழிகள் பிதுங்கி, அவதி தாங்கமுடியாமல் தவித்தான். முகத்தில் பிரேதக் களையே தாண்டவமாடிற்று.

"மகமாயி, குழந்தையை பிழைக்கவை. உன் சன்னிதியில் வெள்ளித் தொட்டில் ஒன்று மாட்டுகிறேன்" என்று வேண்டிக்கொண்டாள் என் மனைவி. சிறிது நேரம் பிரமை கொண்ட வள்போலக் குழந்தையையே உணர்ச்சி யற்று வெறித்துப் பார்த்துக்கொண்டி ருந்தாள். திடீரென்று உள்ளே ஓடி, ஒரு சிறு துணியில் மஞ்சள் தடவி எடுத்து வந்தாள். கையிலிருந்து இரண்டு ஜோடி வளையல்களைக் கழற்றித் துணியில் முடிந்து "தாயே, நீதான் காப்பாத்தணும்.......... குழந்தை எழுந்திருக்கட்டும். வெள்ளித் தொட்டிலை என் கண்மணி உன் சன் னிதியில் அவனுடைய பூப்போன்ற கையால் கொண்டு வைப்பான்.........." என்று உதடுகள் துடிக்கக் கண்ணீர் விட்டுக்கொண்டு, அந்த முடிப்பைப் பெட்டியில் பத்திரமாக வைக்கும்படி என்னிடம் நீட்டினாள்.

குழந்தையைப் பார்ப்பதற்கே கண்ணருவியாக இருந்தது. இறந்து விட்டால்கூட தேவலை என்று தோன் றிற்று. அது படும் கஷ்டத்தைக் காணச் சகிக்க முடியவில்லை.

டாக்டரும் வந்து பார்த்துவிட்டுப் போனார். அவர் என்ன செய்வார்! ஏதோ இரண்டு சொட்டு மருந்தை வாயில் ஊற்றினார். வயிற்றின் மேல் எதையோ தடவினார். மறுநாள் காலை, மறுபடி வந்து பார்ப்பதாகச் சொல்லிப் போய் விட்டார்.

என் மனைவி மட்டும் குழந்தையின் அருகில் அழுதுகொண்டே உட்கார்ந் திருந்தாள்.

* * *

மனதில் நிம்மதியே இல்லை எனக்கு. மின்னல் வெட்டுப்போன்ற உணர்ச்சி வேகத்தில், கரைபுரண்டு நுங்கும் நுரை யுமாகப் பிரவஹித்து ஓடும் காவிரியை நோக்கிச் சென்றேன் தனிமையைநாடி. அப்போது ராத்திரி மணி பத்து ஆகி யிருக்கும். என் மனது எவ்வளவு

இருண்டு கிடந்ததோ அதைவிடக் கரிய இருள் சூழ்ந்திருந்தது எங்கிலும். ஜனச் சந்தடியெல்லாம் அடங்கிவிட்டது. நாராயணப் பட்சிகள் சில வெகு தொலைவில் கிரீச்சா சப்தத்துடன் கவலையற்றுப் பறந்து போய்க்கொண்டிருந்தன. அல்லல்கள் நிரம்பிய மானிட உலகத்து மண்ணை உதறிவிட்டு, ஆகாயத்தில் இருப்பதால் தானோ அவைகளுக்கு அவ்வளவு இன்பம்! ஆஹா! நான் பறவையாக இருந்தால் என்ன பிரும்மானந்தமாக இருக்கும்!

ஆயிரக்கணக்கான மைல்களுக்குக்கப்பால் நடுக்கடலில் புயல் சூழ்ண்டு, பாய் மரம் முறிந்து சிதறுண்டு, கொந்தளிக்கும் கடலில் மாட்டிக்கொண்ட கப்பல் மாலுமியின் மனம் எப்படியிருக்கும்! வாய்விட்டு அலறினாலென்ன, கண்ணீர் சொரிந்து உருகினால் என்ன, மண்டையைக் கப்பலின் கட்டுமரத்தில் முட்டிக்கொண்டால்தான் என்ன—அவன் கரை காண முடியுமா? பைத்தியம் பிடித்துத் தன் தொண்டை கிழிய ஆர்ப்பரித்துக் கொண்டே தலை கிறு கிறுத்து ஆழியில் விழுந்து செத்துப்போவான்! வேறென்ன முடிவு ஏற்படும் அவனுக்கு?

கால்கள் என் உடலைக் காவேரி மடத்திடம் இழுத்துக் கொண்டுவந்துசேர்த்தன. படித்துறை மேல்படியில் உட்கார்ந்துகொண்டேன். கீழ்ப்படியில் ஜலத்தில் கால்களை நீட்டிய படியே குறிப்பற்று ஆகாயத்தையே நோக்கி யோசனையிலாழ்ந்தேன்.

மனக் குகையில் ஒரு மகாபாரதப் போர் உக்கிரமாக ஆரம்பித்து விட்டது! கண்ணனைப்பற்றி என் உள்ளத்தில் புதைந்து கிடந்த ஞாபகங்களெல்லாம் ஏக காலத்தில் வந்து என்னைத் துன்புறுத்தின. ஆற்றின் வெள்ளத்தைவிட வேகமாகக் கண்ணீர் பிரவஹித்தது. சிறு குழந்தை போல அழுதேன்—அழுதுகொண்டிருந்தேன்.

'லொக்' 'லொக்' என்று இரண்டு இருமல் சப்தங்கள். இருட்டாக இருந்ததால் உருவம் தெரியவில்லை. ஆனால் யாரோ வயதான கிழவி என்பதை அறிய முடிந்தது. மடத்துத் தாழ்வாரத்தில் கீழண்டை ஓரத்திலிருந்து மறுபடியும் ஏழெட்டுத் தடவை இருமினாள் அவள். தரையைத் தடவி தடவித் நகர்ந்து வருவது போலவும் இருந்தது.

"..........ப்பா! போன ஜன்மாவிலே யாருக்கு என்ன செய்தேனோ—படுகிற கஷ்டத்தைப் பட்டுத்தானே யாகவேண்டும்!.........." என்று தனக்குள் அவள் முனகிக் கொண்டிருந்தாள். "........இந்த மடத்து அரசமரத்திலே சுத்தி வளையும் பாம்பு கூடப் பிடுங்கமாட்டேங்கிறது என்னை!......." என்று மேலும் நொந்து போன முனகல் வார்த்தைகள்.

என் சிந்தனை கலைந்து விட்டது. யாரோ நாதியற்ற கிழவி என்று எண்ணிச் சற்று நேரம் பேசாமலிருந்தேன். தட்டுத் தடுமாறிக்கொண்டு அவள் படித்துறைக்கு வந்துவிட்டாள். தவறிப் போய்ப் படிதெரியாமல் கால் நொடித்து உட்கார்ந்தாள். பரிதாபமாக இருந்தது. துக்கம் மேலிட்டது எனக்கு. அவளுக்குப் என்னைப் போலவே மனம் சிதறிப் போயிருந்ததென்பதில் சந்தேகமில்லை. சரீரத் தளர்ச்சியே இல்லாத காளை வயதான என்னாலேயே தாங்க முடியவில்லையே, பாவம் நைந்த உடலுடன் அவள் எவ்வளவு அவஸ்தைப்பட்டு உருகுகிறாளோ! எத்தனை நாட்களாக அவள் தவிக்கிறாளோ!....... என்னால் மௌனமாக இருக்க முடியவில்லை.

ஒரு துள்ளுத் துள்ளி "யாரம்மா இந்த இருட்டில்?" என்று சொல்லிய வண்ணம் அருகில் சென்று பார்த்தேன். என் குரலைக் கேட்டு, ஏதோ அதிருப்திப் பட்டவளைப் போல, "........சனி விடாது போலிருக்கு!" என்று பொருமிக் கொண்டு, "நானா—நான்........நான் யாராக இருந்தால் பாடு?" என்று முடித்தாள்.

எனக்கு உணர்ச்சி பொங்கிற்று. தெய்வத்தைச் சபித்தேன். தள்ளாத கிழவி, திக்கற்றவள்!

"இல்லையம்மா! ஆற்றில் ஜலம் தலை தெறித்து ஓடுகிறது. இருட்டில் வரலாமா—தப்பித்தவறி விழுந்துவிட்டால் என்னாகும்?" என்றேன்.

"அப்படி யாகாதான்னு தான் தோன்றுகிறது........" என்று அவள் திடீரென்று பதில் சொல்லவே, நான் திகைத்தேன். அவள் பேசிய தோரணையில் வெறுப்புத் தொனித்தது. குரல் கொடுக்காமலேயே நான் உட்கார்ந்திருந்தேனானால், ஒருகால் அவள் தண்ணீரில் புரண்டு விழுந்திருப்பாள்.

மெள்ளக் கிழவியை இருகைகளாலும் பிடித்து அழைத்துக்கொண்டு மாந்து வராந்தாவுக்கு வந்தேன். "யாரையா நீங்கள்?" என்று நன்றியோடு என்னை விசாரித்தாள்.

"இந்த ஊர்தான்........ மனசு சஞ்சலமாக இருந்தது. தூக்கம் வரவில்லை. இப்படி காத்தாட வந்தேன்!........" என்றேன். தொடர்ந்து, "கிழவி, யாருமே இல்லையா உனக்கு?" என்று அநுதாபத்துடன் வினவினேன்.

அவ்வளவுதான். அத்தனை நாட்களாக நெஞ்சில் குமுறிக்கொண்டிருந்த பல விஷயங்கள் அவளிடமிருந்து வெளிப்பட்டலாயின.

அடடா! ராசாத்தியின் பாட்டி அவள்; துக்கம் மேலிட்டு, மூளை குழம்பி வந்திருக்கிறாள்!

* * *

'அது யார் ராசாத்தி?' என்று பிரமிக்கவேண்டாம். முனிசிபல் பார்க்கில் தினந்தோறும் கடலை வாங்கிச் சாப்பிடுகிறோமே, அதே ராசாத்திதான்!

நடுக்கலெடுத்த குரலில் கிழவி தன்னுடைய ஆதரவற்ற நிலையைச் சொல்லி அழுதாள். துக்கம் தாங்கமுடியாமல் ஆற்று வெள்ளத்தில் சாந்தியைத் தேடலாமென்ற முடிவுடன் அவள் புறப்பட்டாளாம். ஐயோ, அவள் செத்துவிட்டால், ஒன்றுமறியாத ராசாத்தி என்ன செய்வாள்!

* * *

ராசாத்திக்கு வரவர அவளையறியாமல் ஒருவித நாணமும், பலர் கூடியிருக்கும் இடங்களில் தனியாகச் செல்வதற்கு வெட்கமும் உண்டாக ஆரம்பித்திருந்தன. கிழவிக்கும் அதேமாதிரி நாளுக்கு நாள் ஏக்கமும் பெருமூச்சும் வளர்ந்தன. பாவம், கடலை விற்க இனி ராசாத்தி பார்க்குக்குப் போவது எத்தனை நாட்களுக்குச் சாத்தியம்?

அவளுக்கு 'வயது' வந்துவிட்டது. நான்கைந்து வருஷங்களாக ராசாத்திக்கும், முனிசிபல் பார்க்குக்கும் நெருங்கிய தொடர்புண்டு. அப்போதெல்லாம் தமாஷாகப் பாட்டுப் பாடிக்கொண்டு உல்லாச நடையுடன் கடலை வியாபாரம் செய்வாள். அவளிடம் கடலை வாங்கிச் சாப்பிடாதவர்களே கிடையாது. குறத்தி நடையுடன் தில்லானா பாடிக்கொண்டே உடலைக் குலுக்கி நடப்பாள். கவலையற்று இருந்தாள். இப்போது ஏனோ அவள் நாணிச் செல்கிறாள்!

அருகில் வந்து மெல்லிய குரலில் "சாமி, கடலை வேணுங்களா?" என்று மிகவும் பயத்துடன் கேட்கிறாள். சிறு வயதில் துள்ளித் துள்ளிக் கடலைக் கூடையுடன் சென்ற காட்சிக்கும் இப்போது காணும் காட்சிக்கும் என்ன வித்தியாசம்! பார்க்கில் கூட்டம் அதிகமாக இருந்தால் பேசாமல் வீட்டுக்குப் போய் விடுவாள். நான்கைந்து பேர்களாகக் கூடி அரட்டையடிக்கும் இடத்திலிருந்து 'ஏ, கடலை' என்று யாராவது கூப்பிட்டால், அங்கு செல்ல அவள் விரும்புவதில்லை. காதில் விழாதது போல நழுவிவிடத் தோன்றும்.

கிழவிதான் என்ன செய்வாள்? அவளுக்கு ராசாத்திதான் துணை. ராசாத்திக்குக் கிழவிதான் ஆதரவு. இரண்டு பேருக்கும் கடலை வியாபாரம் கஞ்சிக்கு வழிகொடுத்தது. இருவரும் தங்களு

டைய நிர்க்கதியான நிலையை உணர்ந்து உருகினார்கள். சோற்றுக்கு வழிதேடியாகவேண்டுமே, அதை உத்தேசித்துத் தண்ணீரிலிருந்து வெளிப்பட்ட மீனைப் போல, ராசாத்தி குடிசையை விட்டுக் கிளம்பி வியாபாரம் செய்ய வந்து கொண்டிருந்தாள். அப்பொழுதெல்லாம் கிழவி, குழந்தையின் முகத்தில் அரும்பும் நாணத்தையும், ஏக்கத்தையும் பார்த்துத் தவிப்பாள். அவர்களுடைய வ்திதியைக் கண்டு அநுதாபப்படவோ, உதவவோ, இந்த உல்லாச உலகிற்கு நேரமேது?

ஊரை யடுத்து இரண்டு பர்லாங் தூரத்தில், பழங்காவேரிக்கு அப்பால், அவர்களுடைய குடிசை. மழை நாட்களில் எப்படித்தான் அவர்கள் அங்கு வசிக்கிறார்களோ!

கிழவிக்குக் கண்பார்வை மிகவும் மட்டு. எப்போதும் யாரிடமும் பிரியமாகவே பேசுவாள். ஆம், காளை போல முப்பது வயது மகனைப் பறிகொடுத்து விட்ட பிறகு வாழ்க்கையில் அவளுக்கு மத மாத்ஸர்யாதிகளுக்கு இடமேது? மகன் இறந்த சொற்ப காலத்தில் மருமகள் ராக்காயியும் 'போய்' விட்டாள். ராசாத்திதான் தன் பாட்டிக்குத் துணையாக மீந்தாள்!

மகன் இறந்த பிறகு வயிற்றுப் பாட்டுக்கு வழியில்லை. கிழவியும் ராக்காயியும் சேர்ந்து இட்டிலியும் அப்பமும் சுட்டு விற்பனைசெய்து பார்த்தார்கள். காதில் மூக்கில் இருந்தவற்றை விற்று, இட்டிலி வியாபாரத்துக்குப் போட்ட முதல் போய்விட்டது! போதாததற்கு ராக்காயியை 'மகமாயி' வந்து அழைத்துக் கொண்டுவிட்டாள்! அப்புறம் நாதியற்று விடவே, வேறு வழி தோன்றாமல் 'கடலை' வியாபாரத்தில் இறங்கினாள் கிழவி.

இரண்டு அல்லது மூன்றணாவுக்குக் காலையில் கடலை வாங்கிவருவதும், நன்றாக வறுத்துப் பொட்டலங்கள் கட்டிக் கொடுப்பதும் கிழவியின் வேலை. ராசாத்தி சாயந்திரம் பார்க்குக்குச் சென்று கடலையைக் காசாக்கி வருவாள். ஐந்தாறு அணா கிடைக்கும். சிலநாட்களில் போட்ட முதல்கூடக் கிடைக்காமற் போவதுண்டு.

இதே ரீதியில் சுமார் ஐந்து வருஷங்கள் வாழ்ந்தாயிற்று. ராசாத்திக்குப் 'பருவம்' நெருங்க ஆரம்பித்துவிட்டதே, என்ன செய்வதென்று தோன்றாமல் மதிமயங்கித் தத்தளித்தாள் கிழவி. அவளிடம் என்ன இருக்கிறது? காலிகளும் சோதாக்களும் நிறைந்த ஊரில் ராசாத்திக்குக் கெடுதல் ஏற்படாமலிக்க வேண்டுமே என்று திகில் பட்டுக் கொண்டேயிருந்தாள். போதாக்குறைக்கு ஊருக்கு அருகில் இருந்த பெரிய தோப்பொன்றில் 'பட்டாளம்' இறங்கப் போவதாக ஜனங்கள் பேசிக்கொண்டார்கள். அவளுக்கு ஏற்கனவேயே 'பட்டாள'த்தைப் பற்றின சில கதைகள் எட்டியிருந்தன!

அவளுக்குக்கவலை தாங்கமுடியவில்லை. 'பட்டினி கிடந்து செத்தாலும் பரவாயில்லை, ராசாத்தியை இனிமேல் வெளியே அனுப்புவது ஆபத்தாகும்' என்று பலதடவைகளில் நினைப்பாள்.

தன்னைக் குறித்து ஏதோ ஒரு புது விதமான கவலை பாட்டிக்கு ஏற்பட்டிருந்ததை ராசாத்தி அறிவாள். அவள் என்ன செய்வாள்! அவளும் மனம் வெதும்பி ஆண்டவன் கிருபையில் பாரத்தைப்போட்டு, யந்திரம்போல உழன்று கொண்டிருந்தாள்.

* * *

காலை முதல் ஏக்கம் பிடித்தவள் போல இருந்த ராசாத்தி, "பாட்டி, இண்ணைக்கி நான் பார்க்குக்குப் போக மாட்டேன்....... உடம்பு சரியாக இல்லை" என்று திடுதிப்பென்று அன்று மாலை சொன்னளாம். உண்மையில் அவளுக்கு உடம்புக்கு ஒன்றுமில்லை என்பது கிழவிக்குத் தெரியும். மனதி னுள்ள ஏதோ ஒன்றை மறைத்துப் பேசு வதைக் கிழவி அறிவாள்.

"எம்மா, யாராவது ஏதாச்சியும் சொன்னுங்களா?" என்று பரிவுடன் கேட்டாள்.

ராசாத்தி பாட்டியின் அருகில் வந்தாள். முத்து முத்தாகக் கண்களில் நீர் பொங்கிற்று. மெதுவாக "........படு பாவிங்க.... இரண்டு மூணு பேரு........ மிரட்டிக்கிட்டே இருக்காங்க.... அம்மா........" என்று கூறிக் கிழவியைக் கெட்டியாக அணைத்துக் கட்டிக் கொண்டு விம்மி விம்மி யழுதாள்.

தைரியமோ, ஆறுதலோ சொல்லி அவர்களை உத்ஸாக மூட்ட யாரிருக்கிருர்கள்! யாருடைய உதவியைத்தான் அவர்கள் நாடமுடியும்!

பானையில் கொஞ்சங்கூடக் கம்போ, கேழ்வரகோ கிடையாது. சாயந்திர வியாபாரத்தில் காசு கிடைத்தால் வாங்கலாம் என்று எண்ணியிருந்தாள். ராசாத்தி இவ்வாறு சொன்னதும் அன்றையச் சோற்றுக்கு என்ன செய்வது என்ற கவலை உண்டாயிற்று. குழந்தை அத்தனை நாள் பார்க்குக்குப் போய் வந்ததே எவ்வளவோ சங்கடப்படுத்திக் கொண்டிருந்தது கிழவியை.

வேறு வழிதோன்ருமல், அன்று கடலைக் கூடையுடன் தள்ளாடித் தள்ளாடிப் பார்க்குக்குச் சென்ருள் கிழவி. போகும்போது ராசாத்தியை ஆசுவாஸப்படுத்தி "ஜாக்கிரதையாக இங்கியே இரம்மா!" என்று சொல்லிவிட்டுக் குடிசைக்குக் கதவாக உபயோகப்பட்டு வந்த தட்டியை நன்ருகக் கயிற்ருல் கட்டி மூடிக்கொள்ளச் சொன்னுள்.

அஸ்தமித்து இரண்டு நாழிகைக்கெல்லாம் கிழவி திரும்பிவந்து கதவைத்தட்டினுள். "ராசாத்தி!.... ராசா!........" என்று பல தடவை கூப்பிட்டாள். கதவைத் திறப்பாரில்லை. கதவுக்கயிற்றை மெள்ளச் சிரமப்பட்டு நீக்கி உள்ளே சென்ருள்.

அகல் மட்டும் எரிந்துகொண்டிருந்தது. சட்டி பானைகளெல்லாம் உடைபட்டுச் சிதறிக்கிடந்தன. ராசாத்தியையும் காணவில்லையாம். ஐயோ, கிழவியின் மனம் என்ன துடி துடித்திருக்கும்!

[அடுத்த இதழில் முடியும்]



# ஏழையின் சொல்

**‘விஜயன்’**

[‘கூட்டத்தில் கரடியை விட்டு ஓட்டுவதுபோல, இந்தியாவில் பெரிய கொந்தளிப்பு ஏற்பட்டுள்ள இப்போது இக் கட்டுரைக்கு என்ன அவசரம்?’ என்றுதான் முதலில் தோன்றிற்று. ரொம்பவும் யோசித்தேன். சேற்றில் தாமரை முளைப்பதுபோல, குழப்பமான சமயத்தில்தான் பல நல்ல காரியங்களுக்கு அடிகோல வசதி அதிகம். பலனும் விரைவில் கிடைக்கும். சரித்திரம் அதற்கு அத்தாட்சி: ஆகவே துணிந்து இதைப் ‘பாரதமணி’க்கு அனுப்புகிறேன்.]

நிரந்தரமாக இருக்க கூடிய இலக்கியங்களையும், அவ்வப்போது தோன்றும் இலக்கிய கர்த்தர்களையும் மேனாட்டு அறிவாளிகளும், ஏன், அரசாங்கங்களும், ஊக்கமூட்டி ஆதரிக்கின்றனர். சிறந்த இலக்கியமாக இருந்தால் அதை உடனேயே அச்சிட்டு விடுகிறார்கள். உபயோகமற்ற குப்பைகளைக்கூட மீன மேஷம் பார்க்காமல் வெளியிடுகிறவர்களுக்கு உயர்தர இலக்கிய மென்றால் சொல்லவேண்டுமா!

படித்தவர்கள் தொகையும் அதிகம். வயிற்றுக்குப் போதாவிட்டாலும், மேஜைக்கும், நாற்காலிக்கும், புஸ்தகங்களுக்கும் பணம் செலவிடும் ஜாதியார்கள்—மேனாட்டினரைத்தான் குறிப்பிடுகிறேன்! ஆகவே அங்கு நாளுக்கு நாள் இலக்கிய வளர்ச்சி ஏற்பட வசதியிருக்கிறது.

“ஆமாம்! இங்கிலீஷ் பாஷை உலகத்தில் பல பாகங்களில் செல்வாக்குடையது. அதற்கு உலகம் முழுவதும் ‘மார்க்கெட்’ உண்டு. இன்றைக்கெல்லாமிருந்தால் தமிழுக்குச் சில ஜில்லாக்கள் தானே உண்டு........” என்று சிலர் நினைக்கலாம். இலக்கியம் என்று பேச ஆரம்பித்து விட்டால் இந்தக் காரணத்தை நான் ஒப்புக்கொள்ள முடியாது. ‘மார்க்கெட்’டை நம்பித்தான் இலக்கியம் பிழைத்திருக்க வேண்டுமா?........ இலக்கிய அபிவிருத்திக்கு, லாப நஷ்டக் கணக்குப் பார்க்கும் மனோபாவம் பெரிய தடை.

யூனிவர்ஸிடிகளிலும் அரசாங்கத்திலும் எவ்வளவோ வெளியீடுகள், இலக்கியம், ஆராய்ச்சி என்ற பெயர்களால் பிரசுரமாகின்றனவே, அவைகளால் என்ன லாபம் கிடைக்கிறது? இருக்கிற வசதிகளுக்கு, உண்மையிலேயே நல்ல இலக்கியங்களை அவர்கள் கொண்டு வரலாம். ஆனால் சிருஷ்டியின் தத்துவம், பொருளும், அருளும் ஒன்று சேருவதில்லை.

லாப நஷ்டக் கணக்குப் பார்க்க ஆரம்பித்திருந்தால், மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் ஒப்பற்ற இலக்கியங்களை நமக்கு அளித்திருக்க முடியுமா? அரசாங்கத்தின் உதவியோ, யூனிவர்ஸிடிகளுக்குள்ள சாதனங்களோ, அல்லது அவற்றின் பரிபூர்ண உதவியோ ஐயரவர்களுக்குக் கிடைத்திருந்தால், அவர்கள் நூற்றைம்பது வயது வரையிலாவது உயிர்வாழ்ந்து, தாம் சேகரித்த பைந்தமிழ் இலக்கியங்களை யெல்லாம் பதிப்பித்துவிட்டுதான் ‘போயி’ருப்பார்கள். தமிழ்த் தொண்டு, தமிழ்த் தொண்டு என்ற கூச்சலுடன் எவ்வளவோ தடவைகளில் சிலர் பல இயக்கங்களுக்காக வாரியிறைத்தபணம் எந்த விதத்தில் தமிழை முன்னேற்றமடையச் செய்திருக்கிறதோ தெரியாது.

தமிழ் நாட்டிலுள்ள யூனிவர்ஸிடிகளின் மூலம் தமிழுக்கு எவ்வளவு உதவி கிடைக்கும் என்பதையும், தமிழிலக்கியத்துக்கு எவ்வளவு ஆதரவு எதிர்பார்க்கலாமென்பதையும் நாம் அறி

வோம். ஆகவே, தனிப்பட்ட ஸ்தாபனம் ஒன்று ஏற்பட்டாலன்றி, தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு வழியில்லை.

தனிப்பட்ட பிரசுரகர்த்தர்கள், கதைத் தொகுதிகளும், ஓரிரண்டு புஸ்தகங்களும், சில மொழிபெயர்ப்பு நவீனங்களும், வெளியிடலாம். அவர்களால் வேறு என்ன செய்ய முடியும்? பொருள் நஷ்டம் ஏற்படாத வழிகளில் எவ்வளவு தூரம் தொண்டுபுரிய முடியுமோ, அந்த அளவுக்குத்தானே அவர்களால் இயலும்!

எந்த நல்ல விஷயத்துக்கும் பொருளாதார வசதி குறுக்கிடுகிறது. ஆகவே அதை நிவர்த்தி செய்தால் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு வழியுண்டு. தமிழ்த் தொண்டில் இடையறாத ஊக்கமும், மக்களிடையே நன்மதிப்பும், உடைய சிலர் தக்க தலைவரின் கீழ் ஒரு இயக்கம் ஆரம்பிக்கவேண்டும்—ஒரு ஸ்தாபனம் அமைக்க. தமிழர்களெல்லோரும் தங்களாலான நன்கொடைகள் அளித்துக் குறைந்தது ஐந்து லக்ஷம் ரூபாய் நிதி தயாரித்து, அத்தகைய ஸ்தாபனத்தை நிறுவ ஒத்துழைக்கவேண்டும். இம்மாதிரி முயற்சி நடந்தால் கட்டாயம் பயனுள்ளதாக இருக்கும். ராஜாஜியைப்போன்றவர்கள், விழலுக்கு நீர்பாய்ச்சுவதுபோல பாக்கிஸ்தானுக்கு உழைப்பதை விட்டுவிட்டு, அந்த உழைப்பை இலக்கியத் துறையில் உபயோகப்படுத்தி, இயக்கம் தொடங்கினால் எவ்வளவு வெற்றிகரமாக முடியும்!

'ஹிந்தி பிரசார சபை' ஜனனமாவதற்கும், திறம்பட நடந்து வருவதற்கு ஏற்பாடுகள் செய்யவும்—வடக்கத்திய தலைவர்கள் எவ்வளவு சிரத்தை யெடுத்துக் கொண்டனர்!

ஸ்தாபனம் ஏற்படுகிறது. பிறகு?

ஒவ்வொரு வருஷமும் இன்னின்ன தமிழ் நவீனங்கள் வெளியிடுவது, இன்னின்ன ஆராய்ச்சி நூல்கள் பதிப்பிப்பது இன்னாருடைய மொழிபெயர்ப்புக்கள், கதைத் தொகுதிகள் அச்சிடுவது என்று தீர்மானிக்கவும்—தீர்மானத்தைச் சரிவர நிறைவேற்றும் பொறுப்பை ஏற்கவும் அறிஞர்களடங்கிய கமிட்டி ஒன்று; ஸ்தாபனத்தின் நிர்வாகத்தை நேர்மையுடன் நடத்த இன்னொரு கமிட்டி; ஆக இரண்டு கமிட்டிகள் ஏற்படவேண்டும்.

வருஷா வருஷம் வெளியாகும் புஸ்தகங்கள் ஒவ்வொன்றிலும் ஒரு பிரதி வாங்குகிறவர்களுக்குத்தான் மேலே சொன்ன கமிட்டிகளுக்கு அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கவோ, அங்கத்தினர்களாக நிற்கவோ உரிமையுண்டு.

இயக்கத்தை ஆரம்பித்த பிரமுகர்களே ஸ்தாபனம் ஆரம்பமாகும் முதல் வருஷத்தில் நிர்வாகப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளுவார்கள்.

இம்மாதிரி ஸ்தாபனம் ஏற்பட்டால் தான், டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் செய்துவந்த தமிழ்ப்பணியை, அவர்களுக்கு உவப்பானவர்களைக் கொண்டு, அவர்கள் அநுசரித்த முறைகளில், தொடர்ந்து நடத்தச் சாத்தியமாகும்.

அதுமட்டுமல்ல! சிறு கதைகளும், கட்டுரைகளும் மட்டுமே எழுதிப் பிரபலமாகியுள்ள மறுமலர்ச்சி எழுத்தாளர்களுக்கு நல்ல நவீனங்கள் எழுத உத்ஸாகமும், 'கிராக்கி'யும் ஏற்படும்!

ஏழையின் சொல் அம்பலமேறினாலும் ஏறாவிட்டாலும், மனதிலுள்ள ஆவலை அவன் வெளிப்படுத்தலாமல்லவா? அதையேதான் நான் இக்கட்டுரையில் செய்திருக்கிறேன்.

என் எண்ணம் ஈடேறுமா?



# தந்தையாரின் அந்தியகாலம்

எஸ். கல்யாணசுந்தரையர்

'சாந்தி நிகேதன'த் தொண்டையும், பொறுப்பையும் 'குருதேவ'ருக்குப் பிறகு அவருடைய புதல்வர் ரதீந்திர நாத் டாகுர் ஏற்றுக்கொண்டதுபோல, மகாமகோபாத்தியாய டாக்டர் ஐயரவர்களுடைய ஸ்தாபனமாகிய 'தியாகராஜ விலாச'த்துத் தமிழ்ப் பணியைத் தொடர்ந்து நடத்த ஸ்ரீ கலியாணசுந்தரையரவர்கள் பொறுப்பேற்றுக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் எழுதிய குறிப்பு இது.

என் தந்தையாராகிய மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் சென்ற ஏப்ரல் மாதம் காலம் சென்ற பிறகு அவர்களுடைய நண்பர்களிடமிருந்தும் அபிமானிகளிடமிருந்தும் அநுதாபக் கடிதங்களும் தந்திகளும் இரங்கற்பாக்களும் கிடைத்தன. நான் அவ்வப்போது அவர்களுக்குத் தெரிவித்த பதில்களில் அறிவிக்கமுடியாமற்போன சில முக்கியமான விஷயங்களை இதன் மூலம் எல்லோருக்கும் தெரிவித்துக் கொள்கிறேன்:-

சென்ற ஜனவரிமாதம் பதின்மூன்றும் தேதி விடியற்காலையில் என் தந்தையார் கீழே விழுந்தமையால் என்பு முறிவு ஏற்பட்டது. தக்க வைத்தியர்களைக் கொண்டு சிகித்ஸை செய்துவந்ததின் பின்னர் என்பு கூடியதாகத் தெரிந்தது. அந்தச் சந்தர்ப்பத்தில் நகர முழுவதும் யுத்த பீதியினால் குழப்பமடைந்திருந்தது.

ஏப்ரல் மாதம் ஏழாந்தேதி யன்று நகரத்தில் அபாயச் சங்கு ஊதியபிறகு சென்னையிலிருந்து பல குடும்பங்கள் வேகமாக வெளியேறின. என் தந்தையார்பால் அன்புள்ள பலர், "இந்த நிலையில் ஐயரவர்களை இவ்விடத்தில் வைத்திருப்பது சரியன்று, வேறு பாதுகாப்பான இடத்திற்கு அழைத்துச் செல்ல வேண்டும்" என்று கூறி வற்புறுத்தினர்.

என் தந்தையாருக்கு இவ்வூரை விட்டுப் போக மனமேயில்லை. ஆயினும் ஒருவாறு விஷயங்களை எடுத்துச்சொல்லித் திருக்கழுக்குன்றத்திற்குச் சென்று அங்குள்ள திருவாவடுதுறை மடத்தில் இருக்கலாமென்று கூறவே அவர்கள் அரைமனத்துடன் ஒப்புக்கொண்டார்கள்.

பதினோராம் தேதி சனிக்கிழமை யன்று காரில் ஏறியபிறகு அவர்கள் மனநிலை மிக்க சஞ்சலத்தோடிருந்தது. எப்பொழுதும் புஸ்தகங்கள், ஏட்டுச் சுவடிகள், குறிப்புக்கள் ஆகியவற்றினிடையே இருந்துவந்த அவர்களுக்கு அவற்றை விட்டுப் பிரிவது பெரிய துயரத்தைத் தருவதாயிற்று. சிறந்த சிவஸ்தலமாகிய கழுக்குன்றத்துக்குச் செல்கிறோமென்ற நினைவு ஒன்றுதான் அவர்களை எங்கள் வேண்டுகோளுக்கு இணங்கச்செய்தது.

திருக்கழுக்குன்றத்திற்குப் போன பிறகு அவர்கள் தேகநிலை வரவர அபிவிருத்தியாகவே காணப்பட்டது. அங்குள்ள டாக்டர் ஒவ்வொருநாளும் கவனித்துக்கொண்டனர். ஆனால் தம்முடைய புஸ்தகங்களைப் பிரிந்துவந்த துயரம் அவர்களுக்கு மாறவில்லை. அதிகமாகி வந்ததென்றே சொல்லவேண்டும். ஆகவே ஏட்டுச்சுவடிகள், குறிப்புக்கள்,

கடிதங்கள் கையெழுத்துப் பிரதிகள் முதலியவற்றைச் சென்னையில் இருந்து கொண்டுவர ஏற்பாடுசெய்தேன். எனது குமாரன் எட்டு வண்டிகளில் அவற்றை யேற்றி அனுப்பினன்! அவற்றையெல் லாம் கண்டபிறகே என் தந்தையாருக்கு ஓரளவு மகிழ்ச்சியும் மனத்தைரியமும் உண்டாயின.

தாம் எழுதிவந்த சுய சரித்திரத்திற்கு வேண்டிய குறிப்புக்களைத் தொகுத்து முழுவதும் எழுதி வைத்துவிடவேண்டு மென்ற விருப்பம் அவருக்கு இருந்தது. அதற்கு வேண்டிய காரியங்களைக் கவனித்து வருகையில் சென்னையில் பின் னும் சில குறிப்புக்கள் உள்ளனவென் றும் அவற்றை வருவிக்கவேண்டு மென்றும் சொன்னார்கள்.

"அங்கே மாடித் தாழ்வாரத்தில் பல குறிப்புக்களும் கடிதக் கட்டுக்களும் உள்ளன. நீ போய் இரண்டுநாள் இருந்து பார்த்து எடுத்துவரலாம். எனக்கு இப்போது உடம்பு குணமாகிக் கொண்டு வருகிறது" என்று ஒருநாள் என்னிடம் சொன்னார்கள். வைத்தியரி டம் கேட்டபொழுது அவர், நான் போய்வரலாமென்று அநுமதிக்கவே ஏப்ரல்மாதம் இருபத்தாறும்தேதி ஞாயி றன்று இரவு நான் சென்னைக்கு வந்தேன்.

திங்களன்று சென்னையில் கவனிக்க வேண்டியவற்றைக் கவனித்தேன். செவ்வாய்க்கிழமையும் கவனித்துக் கொண்டிருந்தேன். அன்றுமாலை மூன்று மணிக்கு அபாயத் தந்தி வந்துவிட்டது. அபாயத்திற்கு அஞ்சி இந்த நகரத்தை விட்டுப் போனபோது அங்கேதான் அபாயம் காத்திருந்ததென்பதை நான் உணரவில்லை.

உடனேபுறப்பட்டேன். எவ்வளவோ முயன்றும் நகரம்இருந்தநிலையில் போதிய வசதியில்லாமையால் இரவு ஏழுமணிக்கு தான் கழுக்குன்றம் போய்ச்சேர்ந்தேன் சேர்ந்தபிறகுதான் என் தந்தையார் 4-30 மணிக்கே உலக வாழ்வை நீத்து விட்டாரென்ற செய்தி தெரியவந்தது.

போனேன். என் தந்தையாரைக்காண வில்லை. அவர் திருமேனியைப் பார்த் தேன். "போய்விட்டு வந்தாயா?" என்று ஆதரவோடு விசாரிக்கும் வார்த்தைகளைக் கேட்கப்பெறும் பாக்கியம் எனக்கு இல்லாமற்போயிற்று. நான் பிரிந்திருந்த இரண்டு நாட்களில் காலம் வெகு வேக மாகப் பல காரியங்களைச் செய்துவிட்ட தென்றறிந்தேன். திங்கட்கிழமை மாலை ஜுரம்கண்டு செவ்வாய்க்கிழமை காலை யில் கபம் கட்டியதென்றும் அதற்கு மேல் மனித முயற்சி பயன்படவில்லை யென்றும் தெரியவந்தது.

என் மனநிலை இன்னபடி இருந்த தென்பதை எழுதி வெளியிடுதல் முடி யாதகாரியம். மேலே என் கடமைகளைச் செய்யத் தொடங்கினேன். அபரக்கிரி யைகள் நிறைவேறின. அன்பர்களுடைய கடிதங்களும் கட்டுரைகளும் இடை யிடையே எனக்கு ஆறுதலளித்தன.

இப்போது என் தந்தையார் விட்டுப் போன வேலைகளை அன்பர்களுடைய உதவியைக்கொண்டு என்னால் இயன்ற வரையில் நிறைவேற்றலாமென்று எண்ணியிருக்கிறேன். அவர்கள் எழுதி வந்த சரித்திரத்தின் பிற்பகுதிக்கு வேண்டிய சாதனங்கள் பல உள்ளன. அவற்றைக்கொண்டு சரித்திரத்தைப் பூர்த்திசெய்யலாம் என்பது எனது கருத்து. தந்தையாரவர்கள் நிறைவேற் றக்கருதிய புஸ்தக வேலைகள் பல இருந் தாலும் அவர்களுடைய சரித்திரத்தை முதலில் பூர்த்தி செய்யவேண்டியது என் முதற்கடமை யாகும். அதுவே அவர்களுடைய ஆத்மாவிற்குத் திருப்தி யளிக்கும். பல ஆப்தர்களும் அவ்விதமே எழுதி வருகிறார்கள்.

சரித்திரத்திற்குரிய சாதனங்களையெல் லாம் இப்போது சேகரித்து ஒழுங்கு படுத்தி வருகிறேன். விட்ட இடத்தி

லிருந்து அவர்களுடைய இறுதிக்காலம் வரையில் உள்ள வரலாறுகளை யெல்லாம் முற்றும் எழுதிவைத்துக்கொண்டு பிறகு வெளியிடலாமென்று உத்தேசிக்கிறேன். ஆங்காங்குள்ள அவர்களுடைய மாணாக்கர்களும் அபிமானிகளும் அவர்களுடன் நெருங்கிப் பழகியவர்களும் தங்கள் தங்களுக்கு அவர்கள் விஷயமாகத் தெரிந்த செய்திகளைத் தயைசெய்து எனக்கு அனுப்புவித்தால் இச்சமயத்தில் பேருபகாரமாக இருக்கும்.

ஐயரவர்கள் இயற்றியுள்ள பாடல்கள் ஆயிரக்கணக்காக உள்ளன. அவற்றைப் புஸ்தக வடிவாக வெளியிட வேண்டுமென்ற எண்ணமும் எனக்கு இருக்கிறது. எனக்குத் தெரியாமல் வேறிடங்களிலும் அவர்கள் இயற்றிய பாடல்கள் இருக்கக்கூடும். அவற்றையும் நண்பர்கள் பிரதிசெய்து அனுப்பினால் மிக்க நன்றியறிதலோடு ஏற்றுக்கொள்வேன்.

அவர்கள் சோதித்து எழுதிவைத்துள்ள நூல்களும் குறிப்புக்களும் பல திறப்பட்டவை. அவற்றையும் தமிழுலகத்துக்குப் பயன்படுத்துவது என் கடமையாகும். இவ்விஷயத்தில் தமிழபிமானிகளுடைய ஆதரவு எனக்கு இன்றியமையாததென்பதை நான் எடுத்துக் கூறுவது மிகை.

சீவகசிந்தாமணியின் நான்காம் பதிப்புப் புதிய முறையில் அவர்களால் அச்சிடப்பெற்று வந்தது. முத்தியிலம்பகம் தொடங்குகையில் அவர்களுடைய மறைவு நேர்ந்தது. இப்போது அந்நூல் முடியும் நிலையில் உள்ளது. இன்னும் சில மாதங்களில் வெளிவருமென்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாருடைய ஆதரவினால் செவ்வைச்சூடுவார் இயற்றிய பாகவதத்தின் திருத்தமான பதிப்பு குறிப்புரை முதலியவற்றுடன் சென்ற வருஷம் ஐயரவர்களால் ஆரம்பிக்கப்பெற்று நடந்துவந்தது. அவ்வேலை இப்போது தொடர்ச்சியாக நடந்துவருகிறது.

மேற்கூறிய புஸ்தக வேலைகளை நடத்தச் சென்னப்பட்டணமே அனுகூலமாக இருக்குமென்றெண்ணி இப்போது 'தியாகராஜ விலாஸ'த்திலேயே இருந்து வருகிறேன்.

—'ஈழகேசரி'






வேண்டுமென்றே

உங்களை

அவர்கள்

குறிபார்க்கவில்லை



ஆனால் அவதிப்படும் துர்பாக்கிய சாலிகளில் ஒருவராக நீங்கள் ஆகலாம். தலைவிதி அப்படி இருந்தால், நீங்கள் அந்தக் கொடுமைக்கு ஆளாவதிலிருந்து தப்ப முடியாது! ஆனால் நீங்கள் இன்ஷூரன்ஸ் மூலம் உங்கள் குடும்பத்தைக் காப்பாற்றிவிட முடியும்.

விவரங்களுக்கு எழுதுக:

**நேஷனல் இன்ஷூரன்ஸ் கம்பெனி, லிமிடெட்**

**7. கௌன்ஸில் ஹௌஸ் தெரு, கல்கத்தா.**

மதராஸ் பிராஞ்சு: 58, கோபதி நாராயணசாமி ரோடு, தியாகராயநகர், மதராஸ்.

# முதலாளியின் டயரி—சில இதழ்கள்

## சிவதான ஸிம்ம சௌஹான்

(எஸ். குஞ்சிதபாதம் மொழிபெயர்த்தது)

"முன் காலங்களில் யஜமானுக்கு முன்னால் வேலைக்காரர்கள் தலையைக் குனிந்துக்கொண்டு இருக்கவேண்டும் ஏதாவது ஒரு வார்த்தை சொன்னால் நாக்கை அறுத்துவிடமாட்டார்களா அப்போது? இப்போது என்னடா என்றால் நாம் கொடுப்பதைத்தின்று வயிறு வளர்க்கிறவர்கள், நம்மோடு பேச்சுப் பேசுகிறார்கள்..." என்றெல்லாம் தம்முடைய டயரியில் எழுதி வைத்திருந்தார் ஒரு முதலாளி சிவதானஸிம்ம சௌஹான் என்னும் ஆசிரியர் அந்த டயரியின் சில பக்கங்களைக் கிழித்தெடுத்து அம்பலத்துக்குக் கொண்டுவருவார் என்று அம்முதலாளி எதிர்பார்த்திருக்கமாட்டார். ஸ்ரீ எஸ் குஞ்சிதபாதம் அதை மொழி பெயர்த்துத் தமிழ்நாட்டிலும் வெளியிடுவார் என்பதைக் கனவிலும் நினைத்திருக்க மாட்டார்...... சிறந்த இலக்கிய மொன்றுக்குக் காரணகர்த்தாவாக இருந்த அந்த 'முதலாளி' த்துவத்தைப் பாராட்டுகிறோம்.

இன்று ஹார்த்தால் ஆரம்பித்து மூன்றாவது நாள். காலையில் என்னுடைய மோட்டார் தொழிற்சாலையின் 'கேட்' டை அடைத்ததும் நூற்றுக்கணக்கான தொழிலாளிகள் வந்து என்னைச் சூழ்ந்து கொண்டு விட்டார்கள். ஹாரன் அடித்து அடித்து டிரைவரின் கை வலித்துக் கொண்டிருந்தது. ஆனால் அந்தப்படுபாவி தொழிலாளிகள் அசைந்து கொடுத்தால் தானே? அவர்களுடைய கூச்சல், கோலாகலம் விநாடிக்கு விநாடி அதிகமாகிக்கொண்டேயிருந்தது. திடீரென்று இந்தத் தனிப்பட்ட கூச்சல் நின்று போய், ஒரே ஸ்வரத்தில், அண்டகடாகம் அதிர்ந்து குலுங்கும்படியான கோஷங்கள் எண்ணிக்கையில் அடங்காத தொண்டைகளிலிருந்து கிளம்பின.

இங்கிலாப் ஸிந்தாபாத்!
புரட்சி நீடூழி வாழ்க!
முதலாளி ஆட்சி அடியோடு ஒழிக!
தொழிலாளிகளின் சம்பளத்தை
　உயர்த்துக.
வேலையை விட்டுத் தள்ளின தொழி
　லாளிகளைச் சேர்த்துக்கொள்க.
வேலை நேரத்தை எட்டுமணி யாக்குக.
எங்கள் கோரிக்கைகளை நிறை
　வேற்றுக.
முதலாளி ஆட்சி அடியோடு ஒழிக!
தொழிற்சாலை யாருடையது?
　தொழிலாளிகளுடையது.
தொழிலாளி ராஜ்யம் செழித்து
　வளர்க.
இங்கிலாப் ஸிந்தாபாத்!

இதயத்தைக் கலக்கும் இந்தப் பயங்கர கூச்சல்கள் பத்து நிமிஷங்கள் காதைத் தொளைத்துக்கொண்டிருந்தன. டிரைவர் பிரேக் போட்டுக்கொண்டிருந்தான்; அதனால் எஞ்சின் நடுநடுங்கிக்கொண்டிருந்தது. இந்தக் கடோரமான கோஷத்தைக் கேட்டுப் பயமடைந்ததுபோல தரதரவென நடுங்கியது. நான் ஆத்திரமும், ஆங்காரமும் பொங்கியெழ துடிதுடித்துக்கொண்டிருந்தேன்; ஆனால் மேலுக்கு ரொம்ப கம்பீரமாகவும், சாந்தமாகவும் இருப்பது போல அபிநயம் செய்து கொண்டிருந்தேன். யாருக்குத் தெரியும், இந்த மூர்க்கத் தொழிலாளிகள் என்னுடைய காரைத் தகர்த்தெறிந்தாலும் எறிந்துவிடலாம். அநேக ஆயிர ரூபாய்கள் குட்டிச்சுவராகப் போயிருக்கும். உம், என்னையும் கூட........ விடலாம், ஆனால் அவ்வளவு தூரம் கட்டு மீறிப் போய்விடமாட்டார்கள், அவர்களும் பயந்தாங்கொள்ளிகள் தான்! இவ்வளவு கூச்சல் போட்டார்களே ஒரு கல் எறியவேண்டுமே, இல்லை. அப்படிச் செய்திருந்தால் கொஞ்சம் நஷ்டம் ஏற்பட்டிருக்கும். ஆனால் இந்த ஹார்த்தால் அடியோடு நாசமாகும்படி செய்திருப்பேன். சும்மா, தொண்டை

கிழியக் கத்திக்கொண்டிருக்கிறவர்கள் மேலே போலீஸ் குண்டாந்தடிகளை எப்படிப் பிரயோகம் பண்ணுவது? இந்தப் போலீஸ்காரர்களும் உதவாக்கரைகள்! இத்தனை பெரிய கூட்டத்திலே எவன் கல்லைவிட்டெறிந்தான் என்று எப்படிக் கண்டுபிடிப்பது? இருந்தாலும் தடிகளை எடுத்துக்கொண்டு வெளுந்துவாங்கினால் கூட்டம் பறந்து போய்விடாதா? இன்றேடே, ஹர்த்தால் முடிந்துபோயிருக்கும். நம்மைப் போன்றவர்களை ஜாக்கிரதையாகக் காவல் காத்துக்கொண்டிராத போலீஸ்காரர்கள்தான் எதற்குப் பிரயோஜனம்?

எப்படியோ, மோட்டாரை உள்ளே விட்டுவிட்டார்கள். மறுபடியும் வாசற்படியிலேயே மறியல் செய்வதற்குத் தொடங்கிவிட்டார்கள்! எதற்காகப் பிக்கட் பண்ணுகிறார்கள் அவர்கள்? உள்ளேபோக இஷ்டப்படுபவர்களை விடுவதுதானே? ஏன் தடுக்கவேண்டும்? அட, இது சண்டைதான், தகராறுதான், ஆனால் தர்ம யுத்தம் போல கண்ணியமானதாக அல்லவா இருக்கவேண்டும்? என் கட்டாயப் படுத்தவேண்டும்? பலவந்தம் செய்வது சுதந்தரத்தைப் பிடுங்குவது அல்லவா? அப்புறம் சுதந்தரம் என்ன வேண்டியிருக்கிறது, சுதந்திரம்! '22, 30' வருஷங்களிலே அன்னிய நாட்டு சாமான் பஹிஷ்காரம் நடந்ததே அது வேறு விஷயம். அப்போது யார் கண்டார்கள் நம்முடைய ஆயுதம் நம்முடைய மார்பிலேயே பாயும் என்று? இப்போது மகாத்மாகாந்தி சொல்கிறதைக் கூடத்தான் இந்தத் தொழிலாளிகள் காதிலேயே வாங்கிக்கொள்ள மாட்டேனென்கிறார்களே!...........

நாலு மணி சுமாருக்கு தொழிலாளிகளின் 'டெபுடேஷன்' ஒன்று வந்தது. மொத்தம் நாலே பேர்கள். இரண்டு தொழிலாளிகள், ஒருவன் காலாடி, ஒருவன் பயில்வான், இரண்டு தகல்பாஜி 'காம்ரேட்'கள்! இந்தக் காம்ரேட்களினுடைய சாமுத்திரிகா லக்ஷணம் உண்டே அடடா, மண்வெட்டிகள் கூட அவர்கள் முகத்திற்கு ஈடாகமாட்டா! தொண்டை வறண்டுபோயிருந்தாற் போலிருந்தது; மரங்கொத்திப் பறவைகள் மாதிரி தேக அமைப்புக்களோ, அந்த ஹிட்லர் மீசைகளோ, உம், ஒன்றும் சொல்லவேண்டாம்; கரடு, முரடான அநாகரீகஸ்வபாவம்; எப்போதும் சிடுமூஞ்சித்தனம். அவர்களுடைய சட்டைப் பைகளைச் சோதனை போட்டால் தர்பபடிக்கு நாலு விற்கும் பீடிகளையும், துண்டு நோட்டீஸ்களையும் தவிர வேறு ஒன்றும் இராது! அவர்கள் பீடிகளைவேறு எடுத்துக் கொளுத்திக்கொண்டு புகை விட ஆரம்பித்து விட்டார்கள்! என்முகத்துக்கு நேரே குடலைப் புரட்டும் நாற்றமுள்ள புகையை ஊத அவர்களுக்கு என்ன நெஞ்சழுத்தம்? கொஞ்சமாவது அறிவு, அடக்கம் இல்லாத காட்டுமிராண்டிகள்! அவர்கள் குளித்து எத்தனை நாட்கள் ஆகியிருக்குமோ? அவர்களுடைய அழுக்குப்படிந்த துணிமணிகளிலிருந்து துர்கந்தம் உண்டாகிக் கொண்டிருந்தது. என்னவோ தொழிலாளிகளுக்காக உயிரைக் கொடுப்பது மாதிரியல்லவா மார்பு தட்டிக்கொண்டார்கள் அவர்கள்? மூடத் தொழிலாளிகளும் இந்த மோசக்காரர்களின் சூழ்ச்சியிலே மாட்டிக்கொண்டு தாங்களாகவே தங்கள் வாயில் மண்ணை அள்ளிப் போட்டுக்கொள்கிறார்களே! இந்தக் காம்ரேட்கள் இருக்கிறார்களே அவர்கள் இங்கே வரும்போதுதான் இப்படித் தொழிலாளிகளோடு தொழிலாளிகளாக இருப்பதாக வேஷம்போடுகிறார்கள். தங்கள் தங்கள் வீடுகளில் அவர்கள் நல்ல உடை உடுத்திக்கொள்கிறார்கள், நிறைய நெய்போட்டுக்கொண்டு சாப்பிடுகிறார்கள், சிகரெட் குடிக்கிறார்கள், ஸினிமாக்களுக்குப் போகிறார்கள். அங்கே யாராவது தெரிந்தவர்கள் வந்தால் முகத்தைத் திருப்பிக்கொண்டு வேறு பக்கமாகப் போய்விடுகிறார்கள்! நெருப்புக் குச்சியைக் கிழித்து நாஸூக்காக வைத்துவிட்டுப் போவதில் மகா வேலைக்காரர்கள்! தொழிலாளிகளைத் தங்

திரமாக முதலாளிகளுக்கு விரோதமாகத் தூண்டிவிட்டு, காலராமாதிரி ஹர்த்தாலே பரவ விடுகிறதிலே கைதேர்ந்தவர்கள்! முடிவைப் பற்றி அவர்களுக்கென்ன அக்கரை? தொழிலாளிகளின் கழுத்தை வெட்டினாலும், முதுகுத்தோலே உரித்தாலும், அவர்களை வேலையைவிட்டுத் தள்ளினாலும் அவர்களுக்கு ஆக வேண்டியது என்ன? ஊரை ஏமாற்றித் திரிந்துகொண்டிருப்பதுதான் அவர்களுக்கு வேலே. தொழிலாளர் சங்கம் நடக்கவேண்டும், சந்தா வசூல் பண்ணவேண்டும், தங்கள் கைகளிலே அகப்பட்டதைச் சுருட்டிக் கொள்ளவேண்டும், பத்திரிகைகளிலே தங்கள் பெயர்கள் கொட்டை எழுத்துக் களில் அச்சாகவேண்டும்; அவ்வளவு தான் அவர்கள் நோக்கம்! இப்பேர்ப் பட்ட பாஷாண்டி, தூர்த்த மனிதர் களுடன் சேர்ந்து உட்கார்ந்து பேச வேண்டும் என்பதை நினைக்கும்போதே மனம் கலங்குகிறதே! அப்படியிருக்கும் போது இரண்டு தொழிலாளிகளையும் கூட வைத்துக்கொண்டு சரிசமமாக அவர்களுடன் விவாதம் செய்துகொண்டிருப்பது அவமானகரமானதுஇல்லையா? முன்காலங்களில் எஜமானுக்கு முன்னால் வேலைக்காரர்கள் தலையைக் குனிந்து கொண்டு, இருக்கவேண்டி; ஏதாவது ஒருவார்த்தை சொன்னால் நாக்கை அறுத்துவிட மாட்டார்களா அப்போது? இப்போது என்னடா என்றால் நாம் கொடுக்கிறதைத் தின்று வயிறு வளர்க்கிறவர்கள், நம்மோடுபேச்சுப்பேசுகிறார்கள், உருட்டுகிறார்கள், மிரட்டுகிறார்கள், நாம் நாசமாகப் போகவேண்டுமென்று நினைக்கிறார்கள். இவர்களுடைய க்ஷேமத்திற்காகத் தானே ஸ்வராஜ்யம் வேண்டுமென்று பாடுபடுகிறோம்; இவர்கள் இப்படி நம் தலையிலே ஏறிமேய்க்கிறார்களே! காந்திஜியின் வார்த்தைகள் கூட இவர்கள் காதில் ஏறவில்லையோ, அவ்வளவு மௌட்டியமாக ஆகிவிட்டார்களே! இந்தக்கேடுகெட்டவர்களுக்கு நாளுக்கு நாள் திமிரும், சாகஸமும் ஏறிக்கொண்டே போகின்றன. இந்த நன்றிகெட்ட சோம்பேறிகளைப் பிடித்து அரசாங்கம் சிறைக்குள் தள்ளாமல் இருக்கிறதே, இது என்ன நியாயத்தில் சேர்ந்தது? புரட்சி புரட்சி என்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள் இவர்கள்; புரட்சியையே உண்டுபண்ணி விடுவார்கள் கட்டாயம்; தேசத்திற்கே அனர்த்தம் உண்டுபண்ணுவார்கள்இந்தமோசக்காரர்கள். அரசியல் விஷயங்களில் நான் ஜெர்மனிக்குவிரோதமாக பத்திரிகைகளில் என்னதான் வெளியிட்டாலும், தொழிலாளிகள், தொழிலாளிகளின் தலைவர்கள் இவர்களை ஹிட்லர் பல்லைப்பிடுங்கின பாம்பு மாதிரி அடக்கிப் போட்டிருப்பதை ரொம்ப ரொம்ப மெச்சுகிறேன்; புருஷத்தனத்தின் ஆதர்சம் இது. இந்தியாவுக்கு ஸ்வராஜ்யம் கிடைத்தபிறகு நாம் தேச க்ஷேமத்தின் பரமவிரோதிகளான இந்தத் தொழிலாளத் தலைவர் பூண்டுகளை வேரோடு துவம்சம் செய்யவேண்டும். அஹிம்ஸையின் பெயரைச் சொல்லிக் கொண்டே இப்படிச் செய்யலாம்; அப்போது நமக்கு நிச்சயம் உலகத்தின் அனுதாபம் கிடைக்கும்.

சமரசம் உண்டாக்க வந்தது இந்த 'டெபுடேஷன்'. காம்ரேட்டுகள் அவர்கள் பாட்டன் வீட்டுத் தொழிற்சாலை மாதிரி நாற்காலிகளில் கால்மேல் கால்போட்டுக் கொண்டு சாய்ந்து உட்கார்ந்தார்கள். அவர்கள் சுவரில் தொங்கிக்கொண்டிருந்த 'போர்ட்ரெயிட்ஸ்', படங்கள் காலண்டர்கள் எல்லாவற்றையும் பார்த்தபார்வையிலிருந்து அவைகளை வைத்துக் கொள்ள எனக்குத் துளிக்கூட உரிமை இல்லை என்று அவர்கள் நினைப்பதுபோலிருந்தது. மின்சார விசிறிகள், கீழே விரித்திருந்த வழுவழுப்பான கம்பளம், ஸோபாக்கள், டேபிள்கள், நாற்காலிகள், பீரோக்கள் முதலியவைகளை விழித்து விழித்துப் பார்த்த பார்வை, 'இந்த சாமான்களையெல்லாம் நாமும் என்றைக்கு அடைந்து அனுபவிக்கப்போகிறோம்,' என்ற அவர்களுடைய ஆவலை நன்கு காண்பித்தது. இவைகள் தங்களுடைய வைபானால் எதைஎதைந் தனக்கு வைத்துக்கொள்ளுவது என்று அவர்கள் எல்

லேரும் யோசனை செய்வதுபோலத் தோன்றியது. இருவருடைய கண்களும் ஒரே ஸோபாவை நோக்கும்போது அவர்களுடைய மனோபாவங்கள் சண்டையிட்டுக்கொண்டன. அவர்களுடைய பார்வைகள் போட்டிபோட்டுக்கொண்டன என்று எனக்குத் தோன்றியது. இரண்டு பேர்களும் தனக்குத்தான், தனக்குத்தான் என்று எண்ணும்போது எப்படி சமரசம் ஏற்படும்? மூடத் தொழிலாளிகள் தங்கள் தலைமேல் தூக்கி வைத்துக்கொண்டிருக்கும் இந்த காம்ரேட்கள் எத்தனை அல்பபுத்தியுள்ள மனிதர்கள்!

அவர்கள் பாட்டுக்குத் தங்கள் கட்சியையே கிளிப்பிள்ளை மாதிரி திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண்டிருந்தார்கள்—வேலையைவிட்டு நீக்கப்பட்ட தொழிலாளிகளைத் திரும்பவும் சேர்த்துக் கொள்ளவேண்டும், வேலை நேரம் எட்டு மணியாக்கப்படவேண்டும், சம்பளம், கூலி எல்லாம் 15% உயரவேண்டும், மறியல் செய்தவர்களை ஒரு விதத்திலும் தண்டிக்கக்கூடாது, பிராவிடன் பண்டுக்கு ஏற்பாடு செய்யவேண்டும், அல்லது தொழிலாளிகளுக்கு பென்ஷன்கொடுக்க வேண்டும், ஒரு வருஷத்திற்கு மேலே வேலையில் இருக்கும் 'அப்ரெண்டிஸ்' 'பர்மனெண்ட்' ஆக்கப்படவேண்டும், தொழிலாளிகள் சங்கத்தை அங்கீகரிக்க வேண்டும் என்பன போன்ற பல்லவிகளைத் திரும்பவும் பாடினார்கள். இவைகளைத்தான் வெளியிலேயும் கூச்சலிடு

கிருர்கள். பிரசங்கங்களில் இவைகளைத்தான் சொல்கிருர்கள், கடிதங்களிலும், பத்திரிகைகளிலும் இவைகளைத்தான் எழுதுகிருர்கள்; ஒன்றும் புதிதில்லையே. 'டெபுடேஷனும்' இவைகளையே சொல்லத்தானே?

கேட்டுக்கேட்டு அலுப்பு ஏற்பட்டுவிட்டது. வேறு ஒன்றுமே அவர்களுடைய மூளைகளில் எட்டாதோ? அவர்களுடைய சுயநலத்தையே பற்றி ஜபம் செய்கிருர்களே ஒழிய, என்னுடைய சிரமங்களை நினைக்கிருர்களா? ஏன் நினைப்பார்கள்? நாம் திண்டுகளில் சாய்ந்துகொண்டு சுகபோகங்கள் அனுபவிக்கிருேம், பாங்கிகளில் பணம் குவித்துவைத்திருக்கிருேம், அப்படி, இப்படி என்று நினைத்துக்கொண்டிருக்கிருர்கள். நம்முடைய வேலைகள் எவ்வளவு சிரமமானவை? எவ்வளவு சிக்கலான குழப்பமுண்டாக்குகிற பிரச்னைகளையெல்லாம் தீர்த்து சமாளித்தாக வேண்டியிருக்கிறது? அவர்களுக்கு என்ன தெரியும்? என் ஸ்தாபனத்திலே இருந்து பார்க்கட்டும், ஒரே நாளில் அவர்களுடைய மூளை சூனியமாகப் போய்விடாதா? நாம் லாபம் அடைகிருேமென்ருல் சும்மாவா? முதல் போட்டிருக்கிருேம், ரத்தவியர்வை வியர்க்க வேலை செய்கிருேம், எத்தனையோ ஆபத்துக்களையெல்லாம் எதிர்த்து நிற்கிருேம்; அயோக்கியத்தனமாக சம்பாதித்துவிடவில்லையே! இதிலே வேறு யாருக்கு என்ன கேடு வந்திருக்கிறது. இந்தவைபவம் மற்றவர்கள் கண்களை ஏன் உறுத்தவேண்டும்? சோம்பேறிகள் வேலையில்லாதவர்கள் 'ஸோஷலிஸம்' 'சமதர்மம்' என்று கத்துகிருர்கள்; ஏனெனில் அவன்களுக்கு பங்கி அடிக்க கஞ்சா அகப்படவில்லை; நாலுகாசு சம்பாதிக்க யோக்கியதை யில்லை....

இந்த கம்பீரமான சிந்தனைகளையெல்லாம் அந்தப்பாழாய்ப்போன டெபுடேஷனிடம் சொன்னேன். சுயநலத்தினுல் கண்ணவிந்து போயிருக்கும் மனிதர்களுக்கு நல்ல போதனைகளும், லாபகரமான வார்த்தைகளும் கபட விஷயமாகத்தான் தென்படும். "சமாதானம் ஏற்படமுடியாது, ஹர்த்தால் தொடர்ந்து நடக்கும்," என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்கள் அந்தக்கன்வான்கள்! சமரசத்திற்கு அவர்களை யார்போய் வெற்றிலைபாக்குவைத்துக் கூப்பிட்டார்கள்? விநாசகாலம் வரும்போது தலைமேலே ஏறிக் கூத்தாடுவார்கள். இந்த தொழிலாளிகளுக்கும் நாசகாலம் வந்துவிட்டது. இம்மாதிரி நன்றி கெட்டவர்களுக்கு வேலை கொடுத்து, அவர்கள் வசவுகளை வாங்கி மூட்டை கட்டிக் கொள்ளுவதா! பாவம்! இந்த உபத்திரவங்களை எல்லாம் சகித்துக் கொண்டிருக்க வேண்டுமென்று எனக்கென்ன முடை என்பதை இந்த கேடுகெட்டவர்கள் யோசனை செய்ய வில்லையே. பாங்கிகளில் ஐந்தரைக்கோடி ரூபாய்கள் பந்தோபஸ்தாக இருக்கின்றன; பல முறைதலைகள் வீட்டிலே உட்கார்ந்து கொண்டு ஆனந்த போகம் அனுபவிக்க இந்தத் தொகையின் வட்டி போதும். ஆனுல் என் மில்களையும், தொழிற்சாலைகளையும் மூடிவிட்டேனுனல் இந்தப்பன்னிரண்டாயிரம் தொழிலாளிகளும் வேலையில்லாமல் திண்டாடுவார்கள்; ஒரு வேளைப் பிண்டத்துக்குப் பேயாய்பறந்துக்கொண்டு கிடப்பார்கள். இவ்வளவு தொழிலாளிகளுடைய குடும்பங்களையும் போஷித்து வருகிறேன், தேசத்தின் தொழிலை அபிவிருத்தி செய்கிறேன், காந்திஜியின் கட்டளைப்படி லக்ஷக்கணக்கான ரூபாய்கள் தானதர்மங்களில் செலவிட்டு இருக்கிறேன், கதர் உடுத்துகிறேன், காங்கிரஸில் மெம்பராக இருக்கிறேன்; இப்படியெல்லாம் இருந்தும் இந்தத் தொழிலாளிகள் என்னிடம் இப்படி வெறுப்புண்டாக்கும்படி நடந்து கொள்ளுகிருர்களே, ஹும், ஒரு ஒரு சமயத்தில் எனக்கு வருகிற கோபத்தில் என்ன தோன்றுகிறது என்ருல்..... .........

ஹர்த்தால் நீடித்து நடக்குமாம்! பேஷாக நடக்கட்டும்; கொஞ்சம்கூட நான் பின்வாங்கப் போவதில்லை.

(தொடரும்)




# சுவேதாரண்ய ஆசிரம பாலபாடம்—III

கா. சி. வே.

## பாடம் 2.

கடல் மணல் நண்டு கிளிஞ்சல்
அலை ராவணன் மீசை மீன் கடல் நுரை
சுழல் வலை சங்கு
நுரை செம்படவன் பவழம்
முத்து

குழந்தை மணி, நீ எப்போதாவது சமுத்திரம் போய்ப் பார்த்திருக்கிறாயா? நீ எத்தனாவது வயதில் முதல் முதல் கடலைப் பார்த்திருக்கிறாய்? அதைப் பார்த்தவுடன் உன் மனதில் என்ன தோன்றிற்று? உன் ஊருக்கும் கடலுக்கும் எவ்வளவு மைல்? கடலோரத்திலிருக்கும் ஊருக்கு என்ன பெயர்? உன் ஊருக்கு என்ன பெயர்?

நீ இதுவரையில் சமுத்திரத்தையே பார்த்திராவிட்டால் பள்ளிக்கூடத்தில் லீவு வாங்கிக்கொண்டு கால் நடையாகவாவது போய் அவசியம் பார்க்கவேண்டும். குழந்தைப் பருவத்தில் கடலையும், ரயிலையும் பாராத கண் வீண் கண்.

நீ காவேரிப்பூம்பட்டினம் போயிருக்கிறாயா? அந்த ஊர் எதற்கு விசேஷம்?

காவேரி குடகுமலையில் பிறந்து நானூற்று ஐம்பது மைல் அழகுடன் ஓடி, காவேரிப்பூம்பட்டினத்தில்தான் கடலுடன் கலந்து மோக்ஷமடைகிறது. இது இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன் கரிகாலச் சோழனுடைய பிரதான நகரமாக இருந்தது. திருவெண்காட்டை வடக்கு எல்லையாகக்கொண்டு திருக்கடையூரைத் தெற்கு எல்லையாகக்கொண்டு, செம்பனார் கோயிலை மேற்கு எல்லையாகக்கொண்டு, பத்துமைல் சதுரமாய் விரிந்தோங்கி மிகச் சிறப்புடன் இருந்தது.

சிலப்பதிகாரம் மணிமேகலைக் கதைகளை நீ படித்திருக்கிறாயா? இல்லாவிட்டால் எளிய நடையில் வாசகத்தில் எழுதிய புஸ்தங்களை வாங்கிப் படி.

மேலே கொடுக்கப்பட்ட நாலு பத்தியில் கண்டவைகளை எதை அடிப்படையாகக் கொண்டு நான் பிரித்திருக்கிறேன்? அவைகள் ஒவ்வொன்றின் ஒற்றுமை வேற்றுமைகளைப்பற்றி உனக்குத் தெரிந்த வரையில் விவரமாய்ச் சொல்லு.

“பாரதமணி”யின் சிறுவர் பகுதியை வாசிக்கும் சிறுவர்களுக்கு ஓர் வேண்டுகோள். கடலின் மகிமையைப்பற்றி ஓர் கட்டுரை எழுதி “பாரதமணி”க்கு செப்டம்பர் மாதம் 30 ஆம் தேதிக்குள் அனுப்பும்படியாகக் கேட்டுக்கொள்கிறேன். வயது பதினைந்துக்கு மேற்படாதவர்கள் தான் எழுதியனுப்பலாம்.

மிகவும் நன்றாக இருக்கும் கட்டுரை எழுதியவருக்கு ஒரு வருஷத்துக்கு “பாரதமணி” இனாமாக அனுப்பப்படும். அடுத்தாற்போல நன்றாக இருக்கும் கட்டுரை எழுதியவருக்கு ஆறுமாதத்திற்குப் பாரதமணி அனுப்பப்படும்.

# மந்திர மகிமை

டி. எஸ். ஆர். ஐயங்கார்

கிருஷ்ணுவின் புருஷன் பெயர் மாதாதீன். தம்பதிகளிருவரும் அறிவில்லாதவர்கள். சண்டையிடுவதில் சமர்த்தர்கள். அவர்களுக்குள் சச்சரவு ஏற்படாத நாளே கிடையாது அற்ப விஷயத்திற்காக அவர்கள் மணிக்கணக்காக விவாதம் செய்து கொண்டிருப்பது வழக்கம். புருஷன் மனைவியைக் கண்டபடி திட்டுவான். அவள் பதிலுக்கு ஸஹஸ்ர நாம அர்ச்சனை செய்ய ஆரம்பித்து விடுவாள். சண்டை வலுக்க வலுக்க புருஷன் அவளுக்கு தண்டப்பிரயோகம் செய்ய ஆரம்பித்ததும் கிருஷ்ணு அடங்கிவிடுவாள். அடிவிழாத நாட்களில் கிருஷ்ணுவுக்குத்தான் சண்டையில் வெற்றி.

இவ்விஷயத்தில் மாதாதீனிடம்தான் குற்றம் அதிகம். கிருஷ்ணு செய்யும் ஒவ்வொரு காரியத்திற்கும் தோஷம் கற்பித்துக்கொண்டு சச்சரவை ஆரம்பிப்பதே அவன் தொழிலாய்விட்டது. பாவம், கிருஷ்ணு என்ன செய்வாள். பதிலுக்கு வைது அடிவாங்கிக் கொண்டு அழ ஆரம்பித்து விடுவாள்.

இப்படியிருக்கையில் ஒரு நாள் ஒரு சாது கிருஷ்ணுவின் வீட்டிற்கு வந்து பிக்ஷை கேட்டார். அவள் அவருக்கு பிக்ஷை யளித்து அவரை வணங்கி 'பெரியவரே, என் புருஷன் காரணமின்றி என்னை வைவதும் அடிப்பதுமாயிருக்கிறுன். அவன் வசத்தில் வரும்படி செய்ய ஏதாவது உபாயமிருந்தால் அதைச் செய்து அருள்புரிய வேண்டும்' என்று கேட்டுக் கொண்டாள்.

சாது மஹா புத்திமான். இவள் ஒன்றும் சொல்லாமல் இருந்து விட்டால் புருஷன் இவளுக்கு ஒரு கஷ்டமும் கொடுக்கமாட்டான் என்று உணர்ந்துகொண்டார். அவர் உடனே அவளைப்பார்த்து 'நல்லது, கொஞ்சம் அரிசி கொண்டுவா. அதை மந்திரித்துக்கொடுக்கிறேன்' என்றூர். அவள் அரிசியைக் கொணர்ந்ததும் அதை மந்திரிப்பது போல் பாசாங்கு செய்து அவளைப் பார்த்து உன் புருஷன் வீட்டிற்கு வந்ததும் இந்த அரிசியில் கொஞ்சம் எடுத்து வாயில் போட்டுக்கொள். அவன் வீட்டில் இருக்கும் வரையில் உன் வாயைத் திறக்கக்கூடாது. இவ்விதம் பன்னிரண்டு தினங்கள் செய்வாயானுல் அவன் உன் வசப்பட்டுவிடுவான்' என்று கூறிப்போய்விட்டார். 'உன் புருஷனிடம் பதிலுக்குப்பதில் பேசாதே' என்று அவளிடம் சாதாரணமாகச் சொல்லியிருந்தால் அவள் அவருடைய வார்த்தையை மதித்

தே யிருக்கமாட்டாள் என்பதை அவர் உணர்ந்து இந்த உபாயத்தைச் செய்தார்.

சாது சென்றதும் கிருஷ்ணு மந்திராக்ஷதையை வீட்டிற்குள் பத்திரப் படுத்திவைத்தாள். அன்று புருஷன் வீட்டிற்கு வந்ததும் அவள் தன் வாய் நிறைய அரிசியைப் போட்டுக்கொண்டு தன் வேலையில் கவனமாய் இருந்தாள். வழக்கம்போல் மாதாதீன் அவள் செய்யும் காரியங்களில் குற்றம் சொல்லித் திட்ட ஆரம்பித்தான். கிருஷ்ணு வாய்திறக்கவே இல்லை. சாதுவின் வார்த்தையில் அவள் பூரண நம்பிக்கை வைத்திருந்தாள்.

பத்து நாட்கள் இவ்விதமே புருஷன் வீட்டிற்கு வருவதும், அவள் வாயைத் திறக்காமலே தன்னுடைய காரியங்களைச் செய்வதும், அவன் எவ்வளவு ஆத்திரத்தைக்கிளப்ப முயன்றும் பலிக்காமல் போவதுமாய்க் கழிந்தன. 'என் மனைவி சாதுவாகி விட்டாள்' என்று அவன் தீர்மானித்துக் கொண்டான். அவள் செய்யும் காரியங்களில் அவனுக்கு இப்பொழுது குற்றம் குறை இருப்பதாகப்படவில்லை. காரணமில்லாமல் அவளை வைதும்கூட அவள் வாயை மூடிக்கொண்டிருக்கிருளே என்று பச்சாதாபப்பட ஆரம்பித்தான்.

பதினேராவது தினத்திலேயே அவன் தன் மனைவியைப் பார்த்து 'நான் இனி உன்னை வைவதில்லை அடிப்பதுமில்லை நான் செய்த குற்றத்தை மன்னித்துவிடு' என்று சொன்னுன். அப்பொழுது அவள் வாயில் சாதுவினுல் மந்திரித்துக் கொடுக்கப்பட்ட அரிசி இருந்தது. தன் புருஷனுடைய நடத்தை மாறியதற்கு அதுதான் காரணம் என்று அவள் உறுதி கொண்டாள். வாயைத் திறந்தால் அதன் பலன் போய்விடுமோ என்ற பயத்தினுல் அவள் தன் புருஷனுக்குப் பதில் சொல்லவில்லை.

மனைவி பேசாலிருப்பதைக்கண்டு பொறுக்கமாட்டாமல் அவன் அவள் காலில் விழுந்தான். தாங்கமுடியாமல் சிரிப்பு வந்துவிட்டதனுல் அவள் வாய் திறந்து விட்டது. அவள் உடனே தன் புருஷனைக் கிளப்பிவிட்டு "தாங்களும் என்னை மன்னிக்கவேண்டும். நானும் உங்களைக் கண்டபடி திட்டியிருக்கிறேன்" என்று சொல்லிக்கொண்டு அவன் முன் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தாள். அன்று முதல் அவர்களைப் போல ஒற்றுமையுள்ள தம்பதிகள் இல்லையென்று சொல்லும்படியாக அவர்கள் நடந்து வந்தனர். என்னே சாதுவின் மந்திர மகிமை!

---